உ

சிவமயம்.

குமரன் துணை.

# ஜீவகாருண்ய போதம்.



BY

S. MUTHIA PILLAI AVL.

1923.

PRINTED AT THE A. L. V. PRESS, MADURA.



1st Edition) (1000 Copies.

*FREE.*

உ

சிவமயம்.

வெற்றிவேலுற்ற துணை.

# ஜீவகாருண்யபோதம்

கோட்டையூர்,

வித்வான். ஸ்ரீ மீ. சுப்பையரவர்கள் மாணுக்கர்,

இளையாற்றங்குடி

## ஸ்ரீ சொ. முத்தையாபிள்ளையவர்கள்

இயற்றியது.

மதுரை,

ஸ்ரீசேக்கிழார் சைவசித்தாந்தசபையமைச்சரும், தொல்காப்பியமூலப் பதிப்பாசிரியருமான

ஸ்ரீ:பு. சிதம்பர புன்னைவனநாதமுதலியாரவர்களாற் பார்வையிடப்பெற்றது.

ஆவினிப்பட்டி,

ஸ்ரீமாந். பெ. பெரி. சுப்பிரமணியஞ்செட்டியார் அவர்களால்

மதுரை

வடக்குமாசிவீதி,

ஸ்ரீராமச்சந்திரவிலாசம் பிரசில் பதிப்பிக்கப்பெற்றது.

 1923 (முதற் பதிப்பு 1000.

உ

சிவமயம்.

சரஹணபவ ஆனந்தன் துணை.

# முன்னுரை.

---

தண்கடலாடையாய் மன்மறையணியாயேற்ற இத்திண் புவியின்கண் கன்மபூமி என்று பண்டைவல்லுநர்களாற் பெரிதும் போற்றப்பட்ட பரதகண்டத்தின் பெரும் பாகமும் "ஹிந்து" மதம் என்ற கொள்கையைத் தழுவாநிற்பதென்பது நிகழ்காலத் தோற்றமாம். ஹிந்து மதத்தினுள் பெரும் பான்மையும் பல நாமங்களோடு பல மதங்கள் ஊழி பேரினும் தாம் பெயராத வாறாய் நிலைபெற்றிருக்கின்றன. அவைகளுள் சைவ சமயமென்னும் ஓர் மதமுளது. அம்மதத்தினர் விலக்கவேண்டிய பிரதான பொருள்கள் எவையெனில், "கொலை, களவு, கள், காமம் பொய்" என்னும் பஞ்சமாபாதகங்களாம். தழுவவேண்டியவைகள் எவையெனில்; விபூதி, ருத்ராக்ஷதாரணம், ஆலயவழிபாடு சிவனடியாரைப் பேணல், சிவநாமமோதல். இன்னும் "எச்சமயத்தோர் சொல்லும் தீதொழிய நன்மைசெயல்" என்ற மூதுரைப் பொன்மொழிக்கிணங்கப் பாவத்தை விலக்கி, புண்ணியத்தை யேற்றலென்பதே இச்சைவ சமயத்தின் உண்மை என்பரான்றோர். விரிக்கிற் பெருகும், நிற்க,

சைவசமயிகள், மேற்குறிப்பிட்ட சத்கைங்கர்யத்தைக் கடைப்பிடித் தொழுகுபவர்களில் அறமே யுருவெடுத்தாற் போன்ற மன்னர்கட்கு மணிமுடி சூட்டும் வள்ளல்களாகிய நாட்டுக்கோட்டை நகரத்தார்களென்ற வைசியர்களும், இதர ஜாதியாரில் பெரும் பான்மையாருமென்றுரைக்கலாகும்.

மேற்கூறிய தனவைசியர்கள்; நீர்வளம், நிலவளம், செழித்தோங்காநின்ற சோழநாட்டில் கும்பபுரமென்னும் காவிரிப் பூம்பட்டினத்தில் செழிப்புற வாழ்வுற்றுவரு மந்நாளில், சுத்த சைவர்களாய், ஜீவகாருண்ய ஒழுக்கத்திற் சிறந்தவர்களாய், பொதுவாய்க் கூறுமிடத்து சைவசமயிகளென்ற உண்மை அன்னின் கீர்த்திவிளங்க வீற்றிருந்தனர்.

ஜீவப்பிராணிகளைப் புசிக்கும் பொருட்டு வளர்த்தலும், விலைகொடுத்து மாம்சத்தை வாங்கிப் புசித்தலும், ஒருயிரைக் கொல்லுதலும், குற்றமென்று கூறவந்தவிடத்து,

அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்.

என்று "விளம்பிநாகனார்" என்ன அருமையாகக் கூறியிருக்கின்றார். பின்னும் ஜெனித்த நாள் தொடங்கி மரிக்குநாள் வரை மாம்சத்தையே புசித்து ஜீவப்பிராணிகளிடத்து நான் மிகுந்த பட்சமுடையேனென்பானையும், தாம் பிரதிப்பிரயோஜனத்தைக் கருதி யாகங்கள் செய்து உயிர்களை வதைப்பவர்களையும், கூறுமிடத்து

ஊனுண் டுயிர்கட் கருளுடையே னென்பானும்
தானுடம்பா டின்றி வினையாக்கு மென்பானும்
காமுறு வேள்வியிற் கொல்வானு மிம்மூவர்
தாமறிவர் தாம்கண்ட வாறு.

என்று நல்லாதனாரும்

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று

எனப் பொய்யாமொழியாரும் கூறியருளியதையும் நன்று ஆராய்ந்தால் யாகங்கள் செய்வதைப்பார்க்கினும் மேலான புண்ணியம் ஜீவகாருண்ய ஒழுக்கத்தாற் கிடைக்குமென்பது மலைவிளக்காம். இதைப் பார்க்கினும் வேறு நாமடையவேண்டிய பயனென்னை?

ஆதலால், எம் சகோதரர்களே! ஜீவகாருண்யத்தின் பெருமை எல்லாவற்றினும் மேலானதாகையால், அது விஷயமாகப் போதிக்குமிந்நூலை நன்கு கவனித்தாராய்ந்து இதிற் சொல்லிய வண்ணமே புலாலை விலக்குவீர்களாயின், சரவணபவ ஆனந்தன் சகல ஐஸ்வர்யங்களையும் அளிப்பாரென்பதிற் கொஞ்சமும் ஐயமின்றாம்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

ஆவினிப்பட்டி
துந்துபி-௵
பங்குனி௴

பரமான்ம ஊழியன்
☞ பெ. பெரி. சுப்பிரமணியன்.

பாண்டி நாட்டுக்கு அவர்கள் வந்தபின்னரே, அரியூரார் சுந்தரத்தார், இளையாற்றங்குடியாரென மூன்று பிரிவினராகிக் களிப்புறவாழ்ந்தனர். இளையாற்றங்குடியாரென்று சொல்லப் படுபவர்களே நாட்டுக்கோட்டை நகரத்தார்களென் றழைக்கப் படுகின்றவர்கள். இவர்கள் அறநூற்கள் மூறையிடுகின்றபடியே, முப்பத்திரண் டறங்களையும் நடத்தி வருகின்றவர்களாயினும் கொலையையும் புலாலுணவையும் உயிர்க்குயிராய்ப் போற்றி வரு கின்றார்கள். அந்தோ! இந்தக்கொடுமை இவர்களிடையே எந்தக் காலத்தில் நுழைந்துகொண்டதோ? அக்காலவளவு தெரிதற்கில்லை. எட்டுணையும் செய்தற்கு ஏற்றதாயில்லாத இப்பெரும் பவத்தை இவர்கள் கையாளுவதனாலன்றோ, உடன் பிறந்த சகோதரர்க ளாகிய அரியூரார், சுந்தரத்தார் இவ்விருதிறத்தாரும் கூட்டை விட்டு ஆவிபிரியும் தருணமாயினும் தாகசாந்தி செய்தற்கு நீர் கூடப்பருகுகின்றார்களில்லை. அதன்காரணம் நாம் அசைவர்களா யிருப்பதனாலன்றோ? என தன்பார்ந்த சகோதரர்களே! உலகத் தில் நாகரீகமும், தெய்வபக்தியும் சுய பாஷாபிவிருத்தியும் செழித்து விசாலித்துவரும் இந்நாளில் மேற்கூறிய மூன்று மக்க ளில் இருவகையார் சைவர்களாயும், ஒருவகையார் அசைவர்க ளாயும் வாழ்வுற்றுவருதலால், தற்காலமியற்றிவரும் நாகரீகத்தை நோக்க, நமது குலதெய்வமாகிய "மரகத விநாயகர்" திருவருளா லும், இளவல் "சரவணபவ ஆனந்தன்" அருள் நோக்காலும், சுத்த சைவர்களாய்ச் சைவசமயத்தின் உண்மை அன்பின்பொலி வையுடையவர்களாய், பண்டையிற் குபேரபுரத்தில் வாழ்ந்தது போல, இப்பாண்டி நாட்டில் வாழ்வார்களென்று நம்புதற்கு இடமுண்டென்று தெரிகிறது. நிற்க,

ஜீவகாருண்யத்தைப் பெரிதும் விருத்தி செய்யுந் தொண்டு புரிதற்குப் பேரவாவுடையே னாயினும் "ஊழ் கூட்டும்படி யன்றிக் கூடாவாம்" என்ற மூதுரைக்கிணங்க எனது முயற்சி முன்னணியில் நிற்கவில்லை. சிறியன் "முயற்சி திருவினையாக் கும்" என்ற தைரியங்கொண்டு, பன்முறை பிரசங்கவாயிலாய்க் கூறிவந்தேன். இக்கருணத்தில் ஐந்து, ஆறு ஆண்டுகளாய் எனது நேத்திரம்போன்ற நண்பர் இளையாற்றங்குடி ஸ்ரீ: சொ.

முத்தையபிள்ளையவர்களின் நட்பைக்கையாண்டுவந்த காரணார்த்தம், நண்பர் பிள்ளையவர்கள் சின்னாட்களுக்கு முன் 'ஜீவகாருண்ய போதம்' என்ற இந்நூலை என்னிடம் காண்பித்தார்கள். இந்நூலை உற்றுநோக்கியவக்கணமே, இது பெரும்பாலும் சைவ சமய ஒழுக்கத்தினின்றும் வழுவி நடக்கும் மக்களைச் சீர்திருத்தி வைக்குமென்பது பசுமரத்தாணிபோல் இருதய கமலத்தில் வேரூன்றிப் பதிந்தது.

அநேகம் பெரியோர்கள் "பரோபகாரார்த்தம் ஹிதம் சரீரம்" என்று முழக்கியிருக்கின்றார்களே, நாம் அத்தகைய பெரும் கைங்கர்யத்தைச் செய்யாவிடினும் நம்மாலியன்றளவில் சிறு கைங்கர்யங்களேனும் செய்யலாமே என்ற திடம்பெற்று, நண்பர் பிள்ளையவர்களிடத்தில் இந்நூலைப்பூர்த்தியாய்எழுதித்தரல்வேண்டுமென்றுகூற, அதற்கு அவர்களிணங்கி அவ்வாறே பூர்த்திசெய்துதர, சிறு புத்தகவடிவாய் அச்சிட்டுப் பொருள் பெறுது ஜீவகாருண்யத்தை முன்னிட்டும், சமயாபிவிருத்தியைக் கருதியும் இனமாக வழங்கலாமென்றுன்னினேன். எனது கருத்திற்குச் சர்வசாதனமாயிருக்கும் எம்பெருமான் "சரவணபவ ஆனந்தனை அகோராத்திரம் இடைவிடாது பிரார்த்திக்கின்றேன்.

இந்நூலாசிரியர் 'கொன்றவருக்குத்தான் பாவம் தின்றவருக்குப் பாவமில்லை' என்று போலிமாந்தர்கள் கூறும் வார்த்தைகளுக்குத் தகுந்த சமாதானமும், இதேபோல் மாமிசம் மிக்க சுவையுளதென்று சொல்லிக்கொள்வோருக்குத்தகுந்தசமாதானமும் திருக்குறள், தாயுமானவர், பட்டினத்தார், சிவஞான தீபம் திருமந்திரம் முதலிய அரும்பெரும் நூற்களிலுள்ள பாக்களை இடையிடையே சான்றாக எடுத்துப் புகட்டியும், "வெள்ளிடைமலைபோல்" தெற்றென உணரும்படியாக எளிய நடையிற் காட்டாமற் காட்டியும், மனதிற் பதியும்படியாயும் மிகவுன்னதமாகவும் எழுதியிருக்கிறார்கள். இது நிற்க,

கொல்லாமை, புலான்மறுத்தலைப்பற்றி எமது கருத்தை மிகச் சுருக்கமாய்க்கூறி, இம்முன்னுரையைப் பூர்த்திசெய்வன்.

# சிறப்புரை.

---

மதுரை,
ஸௌராஷ்டிர ஹைஸ்கூல் தலைமைத்தமிழாசிரியரும்
தமிழ்ச்சங்கத்தங்கத்தினரும், செந்நாப் போதார் செந்தமிழ்ச்
சங்கத் தலைவரும், ஆங்கில கலாசாலைப் பண்டிதர்
சங்கத்தினமைச்சரும், செய்யுட்பாடக் கோவை தொள்ளாயிரம்
தொல்காப்பியமூலம் முதலிய நூலாசிரியரும்,
வித்தியாபோதினிப் பத்திராசிரியருமாகிய
மகா-௱-௱-ஸ்ரீ பு. சிதம்பரபுன்னைவனநாத முதலியாரவர்கள்
எழுதியது

---

'அருட்செல்வம் செல்வத்துட் செல்வம், பொருட் செல்வம் பூரியார் கண்ணு முள'

என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரருளிய வாய்மொழிப்பொருளை யுற்றுநோக்குவார்க்குக் கீழ்மக்களிடத்தும் பொருந்தி நின்று மாறும்தன்மையதான பொருட் செல்வத்தை இம்மண்ணுலகத்தவர் தேடியின்பமடைய முயல்வதினும் இருமையிலும் இன்பமளிக்கவல்ல அருட்செல்வத்தையடைய முயலுதல் பெருமையுடைத் தென்பது விளங்கும்.

இவ்வருட்செல்வம் இளமை முதலே போற்றப்பட வேண்டுமென்பதும், இவ்வருட்செல்வம் படைத்தார் இன்னு உலகம்புகலும் அல்லலுறுதலுமில்லென்பதும், நூலாய்ந்த நுண்மதியுடையார் துணிபு.

இத்தகைய அருட்செல்வத்தை அடையும்வழியைப் புகட்டும் அறிவு நூலாகிய "ஜீவகாருண்ய போதம்" எனப்பெயரிய இந்நூல், எனது நண்பர் இளையாற்றங்குடி ஸ்ரீ செ. முத்தையா பிள்ளையவர்களால் ஆன்றோரருளிய பல நன்னூல்களின் சாரமாகத் தொகுத்தெழுதப் பெற்றிருக்கிறது. இந்தக்கட்டுரை நூலில் உலகத்துமக்கட்டொகுதியுள் ஆங்காங்கு சிலரிடங் காணப்படும் அனுசாரமுறைகளை யகற்றுமுறைமை இன்மொழியில் எளிய நடையில் பாகமாக எழுதப்பட்டுள்ளது.

சைவசமயத் துண்மையை உலகினர்க்கறிவுறுத்தும் இத்தகையநூலைப் பார்வையிடவேண்டிக்கொண்ட ஆசிரியர் பிள்ளையவர்களுக்கும், இத்தகைய நூலை அச்சிட்டு யாவருக்கும் இனமாக உதவ முற்பட்டிருக்கும் ஆவினிப்பட்டி ஸ்ரீமான் பெ. பெரி. சுப்பிரமணியஞ்செட்டியாரவர்களுக்கும், தமிழுலகத்துக்காக என்னுநன்றிபறிதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

புலவரகம்
5—3—1923

இங்ஙனம்,
☞ பு. சி. புன்னைவனநாதன்.
அமைச்சர்
ஸ்ரீ சேக்கிழார் சைவ சித்தாந்த சபை,
மதுரை.

---

## சாற்றுக்கவிகள்.

---

இளையாற்றங்குடி

மகா-ள-ள-ஸ்ரீ கைலாசமாச்சாரி அவர்களின் புதல்வர்
வினைதீர்த்தாளுச்சாரியவர்களியற்றியது.

---

பார்புகழும் முத்தையன் பார்த்துத் தொகுஜீவ
காருண்ய போதமெனுங் கட்டுரைக்கு—நேர்புதிய
தேனோ செழுங்கனியோ தேவாமு தோபாகு
தானோ விவைஎவையோ தாம்.

காருலவு திங்களொடு கங்கைபுனை நாதன்
பேருலவு இளசைநகர் பெருமைபெற வாழுஞ்
சீருலவு முத்தையன் செய்துதவு ஜீவ
காருண்ய போதமிதைக் கண்டவர் களிப்பார்

---

சிவமயம்.

## மகா-ள-ள-ஸ்ரீ காஞ்சிச் சிவனடியார் திருக்கூட்டத்தார்

### அவர்களால் அளிக்கப்பெற்ற நன்றியறிதல்



நமது நாடு புண்ணிய நன்னாடு. அருள்மிகுந்தது. அன்பு செறிந்தது. ஜீவகாருண்ய நலஞ்சிறந்தது. கொல்லையின் முல்லைக்கு எல்லையில் நல்லருள் சுரந்த பாரிவள்ளல் பரித்தபழம் பெருநாடு. சேயினும் பெரிதாய்ச்செங்கோல் செலுத்திய செம்பியன் செல்வநாடு. புள்ளுரு புன்கண் தீர்த்த புனிதன்புரந்த புகழ்நாடு. புத்தர்பிரான் அருள் பொங்கித் ததும்பிய புனிதநாடு. அன்புப்பயிர் இன்பமாய்ச்செழித் தோங்க அசோகன் ஆண்ட அருள்நாடு. திருவள்ளுவர், திருமூலர், தாயுமானார், இராமலிங்க சுவாமிகள், முதலிய புலவர் திலகர்களுடைய அன்பு உரைகள் மணக்கும் மாண்புமிக்கநாடு. இவ்வாறு புலவர் பாடும் புகழுடையதாய் அன்புநெறியிற்றலை சிறந்து விளங்கிய நமது பாரத தேசத்திலே இதுபோழ்து எத்தனை உயிர்க்கொலைகள் நடைபெறுகின்றன. அந்தோ! எத்தனையாயிரம் ஆடு, கோழிகள் உண்பதற்கும் சிறு தெய்வங்களுக்கும் பலி இடுவதற்காக அலற அலற அருக்கப்பெருகின்றன. ஆயிரம் ஆயிரம் அன்றோ! நாம் இம் மறநெறியை வளரவிட்டு வாளாகிடத்தல் கூடாது. இதனைத்தடுப் பதற்கு எவ்வெவ்வகையில் கிளர்ச்சிசெய்தல் கூடுமோ அவ்வவ்வகையில் எல்லாம் கிளர்ச்சிசெய்தல் வேண்டும். இம்மறநெறியை அறவே யொழித்து விடுதல்வேண்டுமென்பதை யாவரும் ஒப்புக் கொள்ளுகின்றார்களாயினும் இதன் பொருட்டு வேலை செய்யவருவோர்மிகச் சிலராகவே இருக்கின்றார்கள். எல்லோரும் எகமனதாக இவ்வருட்டுறையை வளர்க்க முன்வருதல்வேண்டும். இதுதான் எங்களுடைய பெருவிருப்பம். இவ்வாறு எங்களுக்கு பெருவிருப்பம் தருகின்ற இம்முறையினை அனுசரித்து இவ்வருட்டுறையில் இறங்கி ஜீவகாருண்ய போதம் எனும் இந்நூலினை எழுதியுள்ள இளையாற்றங்குடி ஸ்ரீமாந் சொ. முத்தையாபிள்ளை அவர்களுக்கும் அவர்களுடைய நூலுக்கும் நல்வரவு கூறுகின்றோம். இந்நூல் சாதாரண ஜனங்களுடைய மனதில் நன்றாகப்பதியுமாறு எளிய நடையில் எழுதப்பெற்றிருப்பது பாராட்டற்பாலது. கொலைபுரிவோரும், புலாலுண் போரும் கூறும்

விதண்டாவாதங்களுக்குக்கேற்ற விடைகள் ஆங்காங்கே கூறப் பெற்றுள்ளன இதனை யெழுதிய பிள்ளையவர்கட்கும் அச்சிட்டுதவும் ஆவினிப்பட்டி ஸ்ரீமாந் பெ. பெரி. சுப்பிரமணியஞ் செட்டியாரவர் களுக்கும் எங்கள் நன்றியறிதல் உரியதாகுக.

காரைச்சிவனடியார்,
திருக்கூட்டத்தார்,
காரைக்குடி.

உருத்ரோத்காரிஸு
வைகாசிமீ 24உ

—•• ••—

## ஓர் நண்பருடைய வாழ்த்து.

—•• ••—

உலகத்திற்கு பேருபகாரமாய் இந்நூலைச்செய்து வெளியிடக் கருதின எனது நண்பர் எஸ். முத்தையாபிள்ளையிடம் எனக்கேற் பட்டுள்ள அன்பைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இந்நூலைப் பார்த்தவளவில் இவ்வாசிரியரின் சித்தம் எவ்வழி யிற்சென்றிருக்கின்றதென்பது நன்குவிளங்கும். நீண்டகாலம் இவ ரோடு யான் பழகிய வரை கல்விப்பயிர்ச்சி, தெய்வ பக்தி, வாய்மை, அமைதி தருமசிந்தை இளகிய மனதுமுடையார். எதிலும் நல்ல ஞானமுள்ளார். இவரின் ஜீவனோபாயமும் அதற்கேற்றதே. சிங்கப் பூர், ரங்கூன், கொழும்பு முதலாய இடங்களுக்கு வணிகருக்குள் கர்ண வேலைக்கு ஐந்தாறு முறை தக்க சம்பளத்திற்குப்போய் வந் தவர். இன்னும் அவ்வாறு போய் வருவதற்கு மனமும் திடமும் உடையார். இன்னும் அனேக வியாபார விஷயங்களும் நன்றாய் அறிந்தவர். ஈதல்லாமல் பலவித கைத்தொழில்களிலும் சிறந்தவர். தேர்ச்சியுள்ள போட்டோகிருப்பர், கெடிகாரம், முதலிய இயந்திர சம்பந்தமான தொழில்களும் நன்றாகச் செய்யக்கூடியவர். மற்றெவ் வித மெக்கானி ஸங்கிகளிலும் பயிற்சியும் அதற்கேற்ற புத்தியு முடையார். ஆதலால் இவருக்கு நீண்ட ஆயுளையும் பெருத்த செல் வத்தையும் அளிக்குமாறு கடவுளைப் பிரார்த்திக்கின்றேன்.

NAGARATNAM ACHARI
of Tiruppattur,
Sub-Registrer Office clerk.

5—4—23.

உ

வெற்றிவேலெனக்குற்றதுணை.

# ஆக்கியோன் கருத்து.



நீர்வளம், நிலவளம், மலைவளம் நிறைந்த பன்னாட்டினுஞ்சிறந்த நன்னாடாகிய தென்னாடென்னும் பாண்டிநாட்டின்கண் முற்காலத்தில் கலைமகளை இருதய கமலத்தில் வைத்து வளர்த்த அனேகந் தமிழ் வல்லுநர்களும் அவர்களை அன்போடாதரித்த பலவரசர்களும் மலிந்தனரென்றும் அக்காலத்தில் செந்தமிழ் மாது எங்குஞ் செழிப்புற உலவினளென்றுஞ் சொல்லுதற்கு அவர்கள் செய்த பன்னூல்கள் 'உள்ளங்கை நெல்லிக்கனிபோல்', தோன்றா நிற்கின்றன. அதற்குப் பின்னர் அனேகம் வேற்றரசர் அரசாளவந்த காலத்தில் நங் கலைமாதை யாதரிக்குமனேகரிருந்துமில்லாததுபோலாகி, "செல்லாவிடத்துப் பொறுமை யதிகம்" என்பதேபோல் மௌனமாயிருந்தனள். தற்காலத்திலோ இந்தமிழ்நாட்டுக்கோர் கிளர்ச்சியுண்டாகி நம் கலைமாது வசிப்பதற்கேற்ற வாசக சாலைகளும், கல்விச் சங்கங்களும், சமய சித்தாந்த சபைகளும், இப்படிப் பல பெயர்களுடன் விளங்குமிடங்களும், நன்மார்க்கத்துக்கேதுவாகிய அநேக நீதி நூல்களும் பற்பல பத்திரிகைகளு மிவைகள் தளராவளர்வதற்கேற்ற பல வறிஞர்களு மாங்காங்கு அதியூகத்துடன் முன் நிற்பதே இந்நாட்டுக்கோர் நற்காலம் வந்ததென்பதற்கும் இனி நம் தமிழ்மாது நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாய் நிலவுவளென்பதற்கு மிதுவே போதிய சான்றாகும். இவைகளைக் கண்ணுற்ற எமக்கு நாமும் முன் னிற்கவேண்டுமெனுமவா மேலிட்டு அதற்கேற்ற கல்வியறிவில்லாமையின் நாணமுற்றிருந்தும் "ஆசைவெட்கமறியாது" எனும்மூதுரைப்படி நம்மாலியன்ற தெதையேனுஞ் செய்தல் மனத்துள் நலமெனக் கொண்டு உலகத்துளெல்லாவற்றினும் ஜீவகாருண்யமே சிறந்ததெனத்தோற்றி இதனை எம்மறிவுக்கெட்டியவளவும் வரைந்து வருங்கால், எமதன்பார்ந்த நண்பர், ஆவினிப்பட்டி மகா-௱-௱-ஸ்ரீ பெ. பெரி. பெரியணன் செட்டியாரவர்களின் சிரேஷ்ட புதல்வர் ஸ்ரீமாந் சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் எம்மைச் சந்தித்த

போது இவ்விடயத்தையவர்களிடம் வெளியிட நண்பரவர்களும் நன்னோக்கம், கல்விஞானம், நுண்ணறிவு, ஜீவகாருண்யம் முதலான சத்விடயங்களிற் புறப்பற்றின்றி யகப்பற்றுடைய வர்களாதலாலிதனைக் கல்லா முதலெல்லோர்க்கும் புலப்படுமாறு எளிய நடையில் பூர்த்தி செய்து தரல்வேண்டுமெனவும், அதைத் தம் பொருட்செலவா லச்சுவாகனத்தேற்றிப் பலருமறியப் பரோபகாரமா யளிப்பதாயும் வற்புறுத்த, எமக்கு முன்னினும் மனக்கிளர்ச்சி அதிகமுற்று இந்நூலையும் உலகத்தார் கண்யத்தையும் வெளியிடுவான் விரும்பி வாசக வாயிலாகச் செய்து முடித்தனம்.

ஆனாலிதிற் புகுத்திய விடயங்கள் யாவும் மாமிசம் புசிக்கப்படாதென்றும் அதன் காரணமாய் உயிர்களைக் கொல்லப்படாதென்றும் விளக்கியதேயல்லால் வேறில. இது உலகத்துள்ளார்கட்கு தெரியாத விடயமென்றும், அதனை யாம் தெரிந்தவனென்றும் கூற முன்வரவில்லை. நம்முன்னோர்களிற் கல்வியறிவினாற் கடவுளனுக்கிரகம் பெற்ற மஹான்களனேகர் பாவமின்னது, புண்ணியமின்னதெனக் கூறியவிடத்து ஜீவகாருண்யத்தைப் பெரிதும் பரிந்துணர்த்தி யிருக்கின்றார்கள். ஆனாலவைகள் அரும்பதங்களடங்கிய செய்யுள்களாயிருப்பதால், கல்வியறிவுடையார்கட்கு மாத்திரமே பயனளிக்கின்றன. அதனால் யாம் அவர்கள் கூறிய கருத்தைத் தழுவியே வாசக ரூபமாய்ப் போதித்தால் எல்லோரும் பயனடைவார்களென வெண்ணியதே யல்லாற் பிரிதில. இவ்விடயத்தை யுணர்த்துவதானாற் கொல்லாதே, யதைத்தின்னாதே, என்றாற் போதுமா? அப்படியானாலிரண்டே வார்த்தையோடு முடித்துவிடலாம் அது கேட்பவர் மனதிற் பதியாது செவியின்வழி யூடுருவிச் சென்றுவிடுமே; அதனால் யாதுபயன்: ஒரு விடயத்தை யாருக்கும் போதிப்பதே யானால் அதிலுள்ள மருமங்களைத் துலக்கி உரைத்தாற்றானே கேட்பவர் மனதுட்புகும். இது நம்மனுபவத்திலறிந்த விடயமே; அதற்காக மிகைபடக் கூறினும் பார்க்கவும், கேட்கவும் மனஞ்சலிப்புற்று ஆமோதிக்க மாட்டார்களென்றும், அதிகம் சுருக்கினாலும் பயன்தராதென்றும் ''சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல்'' என்னும்

நன்னூற் சூத்திரவிதியை யநுசரித்தும் எம்மறிவுக் கேற்றவாறு சுருக்கியும் விளக்கியும் முழக்கியதேயாம்.

நண்பர்களே! இனிமேலாகினு மிப்பாவச் செய்கைக்குட் படாது புண்ணியமாகியவைகளை மிகுதியும் செய்தல்வேண்டுமாகக் கேட்டுக்கொள்கின்றோம்.

சில குடும்பத்தில் நல்லொழுக்கமுடைய புத்திமான்கள், அக் குடும்பத்திலுள்ளவர்கள் மாமிசம் புசித்தாலும் ஜீவகாருண்யமிகுதி யால் அதனைக்கொஞ்சமும் கருதாது பிறவிச்சைவமோ அல்லது இடையிலோ அதன் நேசத்தை வேரறுத்து நாசஞ்செய்திருக்கின் றார்கள். அவர்கள் செய்த பூர்வபுண்ணிய வசமன்றோ? அவர்களின் நுண்ணறிவிற்கு எதனை ஒப்பிட்டுரைக்கமுடியும்? பிறவிச்சைவமாக விருப்பது போகட்டும்; குழந்தைப்பருவ முதல்தின்று அதன் தன் மையையறிந்தவர்கள் இடையில் விட்டொழிப்பதென்றால் எத்தகை யோருக்கும் அருமையினும் பெருமையான விடயமே. தீரவைராக் கியத்துடன் வெறுத்தவர்களின் பெருமையறிய விரும்புவோர் "புதுச்சைவம், பழையசைவம்" என்ற நூலைப் பார்த்தாலதன் மகிமை நன்குவிளங்கும்.

பழையசைவத்திலும் புதுச்சைவத்திற்கே, ஏற்றமதிகமாகக் கூறியிருக்கின்றது. சிலர் நீதி நூல்களையாராய்ந்தோ, அல்லது உபன் யாசங்களைக் கேட்டோ அவ்விடத்தில் ஞானமுதயமாகி இதனை இத்தனை காலம் அருந்தியது பெரிதும் தப்பான காரியம், இனி யொருக்காலுமிதனைக் கையாடுவதின்றெனத் தம்மனத்துறுதி செய்து சைவத்தைக் கைவசப்படுத்தி யிருக்கின்றனர். சின்னாட் சென்ற பிறகு, இவர்கள் மனதார விட்டாலும் அது இவர்களை விடு கிறதில்லை "பழயகுருடி கதவைத்திறடி" என்னும் காளமேகப்புலவர் கூறியதேபோல் சைவத்தை மறந்து அவைகளை வாயினுட்போட்டு தொண்டையிற் சிக்கிக்கொள்ளாவண்ணம் நன்றாக மென்று வயிற் றுக்குட் சேர்த்து ஜீரணிக்கும்படி செய்கின்றனர். அன்னவருக்கு முன்னுதித்த ஞானத்திற்கு ஈதனை யொப்பிடலாமென்றால் "சுவர் ணம் சாப்பரிற்கிடக்கும்போதுதித்த ஞானத்தை யொக்கும்" ஆன

தாலவ்விதபோலிச் சைவத்தைக்கைக்கொள்ளாது உண்மையான மனத்துடன் இது பாவந்தானென்றறிந்து விடல்வேண்டும். அப்படி விட்டாலொழிய ஈசனற்புத பொற்பாதங் கிட்டாவாம். ஆனதாற்றான் "அற்றது பற்றெனி லுற்றது வீடு" என ஆன்றோர் கூறியிருக்கின்றார்கள். இன்னும்,

ஜீவகாருண்யமென்பது ஒரு குடும்பத்திலுள்ள ஒருவருக்கு மாத்திரம் போதாது. மற்றேனையவர்கட்கு மிதிலுள்ள விடயங்களைப் புலப்படுமாறு போதித்து விலக்கும்படி செய்வதுவே எல்லாவற்றிலும் மேலாகிய தர்மமாம். இதிலடங்கிய யாவும் முன்னரே நீங்கள் தெரிந்திருந்தாலும் யாம் கூறியதையு மிதற்கோர்பற்றுக் கோடாய்க்கொண்டு இனியொருக்காலு மிப்பாவமான வழக்கத்தைச் செய்யாதிருப்பீர்களெனச் சிந்திக்கின்றேன். அப்படிச் செய்யின் என்றென்றைக்கும் குறைவற்ற செல்வத்துடன் நாமெல்லோரும் வாழும்படி எம்பெருமான் கிருபை பாலிப்பாராக.

பெரும் பான்மையும் உலகத்துள்ள நான்கு வருணத்தாரும் சில வித்தியாசங்களுண்டன்றி எல்லோரும் சைவர்களேயாம். அப்படியுள்ள நாம், சைவத்தை நாளுக்குநாள் நழுவவிட்டு அசைவர்களாய்ப் போனதின் நிமித்தம், சைவர்களென்ற பெயரையொழித்து இடுகுறிப்பெயர், காரணப்பெயர்களால் வந்த பெயரை முற்றும் வழங்கிவருகின்றோம். இதிற் சிலரே இக்காலத்தில் சைவர்களெனவும், தாங்களொரு ஜாதியரெனவும் பிரித்துப் பேசிக்கொள்கின்றார்கள். நாமதை ஆராயுமிடத்து இவர்கள் காலத்திலோ, அல்லது இவர்கட்கு முந்தியவர்கள் காலத்திலோ சைவத்தைக்கைப்பற்றினவர்களாயிருத்தல் வேண்டுமென்பது புலனும். அவர்கள், தாங்களந்தணர்கட்கடுத்தபடி யாரெனச் செய்துவரு முபர்வுக்கு, மற்றெல்லோரும் ஒற்றுமையாகவே நடத்திவருகின்றோம். அதற்கியைய, அவர்களெவ்விடத்திற்குச் சென்றாலும் அங்குள்ளார் அவரைக்கண்ட மாத்திரம் உபசாரத்துடன் உன்னதமாகிய ஆசனத்துட்காரும்படி செய்வதும் தவிர எத்தலங்களிலும் மற்றெவ்வித விசேடங்களினும் எற்கும் பரியூரணதைப முன அந்தணர்கட்களிப்பித்து, பின்னே அச்சைவர்கட்

களிக்கும்படி செய்து அதற்குப் பின்னரே அசைவர்களாகிய நாம் பெற்றுக்கொள்ளுகின்றோம். அவர்கள் நம்மவரில் ஒருவராயிருந் தும் இவ்வளவு மரியாதையு முயர்வுமுற்றதின் காரணமென்னே? இத்தனை பெருமையைத் தரும் சைவத்தையவர்கட்குத் தத்தம் செய்துவிட்டு நாம் அசைவர்களாய்ப் போனதினாலன்றோ !

அன்பர்களே இதுகாறுமிருந்தது போலிராமல் இனியாகி னும் இவ்வளவு உயர்வைத் தரக்கூடிய சைவத்தைப் பேணி ஒழுகப் பேரவாவுடையோராயிருக்க எல்லோரும் முயலல் வேண்டுமெனக் கோருகின்றேம். கொன்றுதின்பதே தொழிலாக உடைய மேல் நாட்டு வெள்ளையரும் சள்ளையாய் நினைத்து புலாலை யொழித்து வரு மின்னாளிற் சைவசமயிகளாயுள்ள நமக்கு இன்னும் மதிவரா தென்னே! இஃதிம்மட்டோடு முடிப்பாம்.

இதனை நோக்கும் பெரியார்களும், சிறியார்களும், கல்வி யறிவுளார்களும் செல்வவந்தர்முதலிய யாவரும் இதிற் சொற்குற் றம், பொருட்குற்ற மிருப்பினுமவற்றையோர் பொருட்டாய்க் கொள்ளாது மன்னித்து "நீரொழிய பாலுண் குருகிற்றெறிந்து" என்பது போதர குற்றத்தை நீக்கிக் குணத்தைப் பருகிக்கருணை யொடுங்காத்து இரக்ஷிக்க வேண்டுமென வணக்கத்துடன் பன்முறை கேட்டுக்கொள்கின்றேம். நிற்க,

இன்னும் மற்றுமுள பக்ஷி சாலங்களை எண்ணிறைந்த சூட்சி யால் அவரவர்கள் புத்திக்கெட்டினமட்டிலும் பிடித்துச் சட்ணிபண் ணும் எயினர் முதலிய இழிகுலத் தோரையும் எதிர் மதத்தோரை யும் யாமிதிலெடுத்துக் கொளவில்லை. எச்சமயத்தினுமிச்சமயம் தளரா வளருந் தன்மையுள்ள செப்புதற்கரிய ஒப்புவமையிலா சைவ சமயத்துளூற்பவித்த புண்ணிய சிலர்கட்குங், கல்வியறிவுளார்க்கு மேயாம்.

இவ்வுலகவிச்சையிற் சிக்கிக்கிடக்கும் யாம் நிச்சயமாக இச் சமய கோட்பாட்டி லச்சமற நிற்பதே யழகாகும் ஆகலின் இதிற் றுலக்கிய விடயங்கள் யாவும் விழலுக்கிறைத்த நீரேபோலாகா திலை யுறுத்தலே நன்மக்கள் செயலாம்.

இதில் எம்மையறியாது ஏற்பட்டிருக்கும் சொற்குற்றம் பொருட்குற்றங்களையும், இன்னும் ஏதேனுஞ் சொல்லவிட்டிருக்கும் பொருத்தமாகத் திருத்துமுறைகளையும், கண்ணுற்ற நண்பர்கள் தெரிவித்தால் அவ்விதஞ் செய்து அவர்களின் நன்றியறிதலையும் இச்சிறு புத்தகத்தை வாசித்து இதிற்சொல்லியவிடயங்கள் எல்லாம் உண்மைதானென்றறிந்து புலால்புசிப்பதை யொழித்து சைவத்தைக் கைக்கொண்டவர்கள் எமக்கு அறிவிக்க அவர்களின் ஜீவகாருண்யத்தையும் அடுத்த இரண்டாம் பதிப்பில் வெளியிடச் சித்தமாக விருக்கின்றோம். சுபம்.

இங்ஙனம்,
ஜீவகாருண்யபோதன் அடிமை,
S. முத்தையன்,
இளையாற்றங்குடி.



உ

சிவமயம்.

வெற்றிவேலுற்றதுணை.

# ஜீவகாருண்ய போதம்.



## விநாயகர் துதி.

### ஒரு விகற்ப நேரிசை வெண்பா.

பாரதனி லுற்றமக்கள் பல்லுயிரைக் கொன்றுபவ
வாரிதனி லாழாவகை யதனைத்—தேர்ஜீவ
காருண்ய மாமனமே கஞ்சமல ரஞ்சரண
வாரணத்தை யென்றுமிக வாழ்த்து.

ஐயன்மீர் !!

சைவசமயத்துள்ள, கனதனவான்களனைவர்கட்கும், வெள்ளாட்டார், செம்மறியாட்டார், குக்குடத்தார், மச்சநாட்டார், இடபநாட்டாராகிய, யாங்கள் எங்கட்காகவும், மானூரார், முயலூரார் உடும்பூரார், எலியூரார், காடை நாட்டார், கவுதாரி நாட்டார், புறாவூரார், இன்னுஞ்சிலரும், நீங்கள் செய்யும் உபத்திரவம் சகிக்கமுடியாதவர்களாய் எங்களிடம், அடிக்கடிவந்து முறையிடும் அவர்கட்காகவும், வணக்கமாய்த் தெரிவித்துக்கொள்ளும் விக்ஞாபனம்.

என்னவெனின் :

## ஆடுகளின் உபன்யாசம்.

இப்பரத கண்டத்தின்கண், சைவசமயத்திலுற்பவித்த உங்கள் வேட்டலுக்கு, வாட்டமிலாது, இந்நாட்டில் திரியும், ஆட்டாராகிய, யாங்கள் சாற்றுவதைக் கேட்டுவாருங்கள்.

எங்கும் நிறைந்ததாயும், ஆதியந்தமற்றதாயும், எல்லாவற்றினும், மேலானதாயும், ஒருவாற்றானும் ஒப்புயர்வு குறிக்கப்படாதனவாயும், நிர்மலமாயும், தத்துவங்களனைத்தையும்வென்றதாயும், நாதாந்தமாயும், அளவுகடந்த வேதாகமங்கள் ஆங்காங்கு கோஷித்ததிசயிக்கின்றதாயும், மனோவாக்குக்கெட்டாததாயும், கருதுவார் கருதியவண்ணம் காக்ஷியளிக்கும் பெருங்கருணைக்கடலாயுள்ள 'கடவுள்' கடலாடையாற்

சிறந்த, இப்பூமியின்கண் படைத்தளித்தழிக்கப் பெற்றியங்கும், எண்பத்து நான்கு நூறுயிரம் ஜீவ பேதத்துள், மக்கட்பிறவியு மொன்றே. இப்பிறவியிலுற்பவித்தவர்களுக்கே, சப்த, ஸ்பரிஸ, ரூப, ரஸ, கந்தமென்னுமைந்தறிவினேடு, இதற்கு மேலதாகிய விசேடவறிவொன்றும் ஆக, ஆறறிவுகளாகத்தந்து, அவ்வறிவால், சேர்க்கையறிவாகிய கல்வியறிவைக்கொண்டு, வேதாகம சாஸ்திரங்களை யுணர்ந்து, விதித்தவைகளைச்செய்து, விலக்கியவைகளை யொழித்து, தத்தம் நிலைகளினின்றும், வழுவாது, அனுதி நிர்மல முத்தராகிய கடவுள்தான் சிவன் ஜீவனென்றறிந்து, பழவினையானும், அஜாக்கிரதை முதலியவற்ருனும், வந்தடைதலாகிய பவத்தை யொழித்து, எம்பெருமானின் றிருவடிக்கு அன்புசாத்தும் பக்திக்கும், முக்திக்கும், உரிய மக்கட்பிறப்பே, எப்பிறப்பினுந்தலைமைத்தாம்.

இம்மானிடயாக்கையைப் பெற்ற யாவர்க்கும், கடவுள் விசேடவறிவையளித்திருப்பினும், மேற்கூறியபடியதனேடு, கல்வியறிவும் வேண்டுவ தவசியந்தானேவெனின், "வெண்கல விளக்கேயாயினுந் தூண்டுகோல்வேண்டும்'' என்னும் பழமொழிக்கிணங்க, கல்வி யறிவில்லாவிடில், விசேடவறிவு பிரகாசமின்றி மழுங்கிவிடும். ஆதலால், நன்மை, தின்மை, இன்னதெனப்பகுத்தறிந்து, அந்நெறி பிறழா தொழுகி, அறம், பொருள், இன்பம், வீடு, என்ற நான்கு புருஷார்த்தங்களையும் பெற்றுய்வதற்கு, விசேடவறிவோடுங் கல்வி யறிவும் வேண்டுமென்பதே ஆன்ருேர் கருத்து.

உலகத்துள், கல்வியறிவிலா மக்கள் சிலரேயுளர். கல்வி யறிவுடையோர் பெரும்பான்மையராயிருந்தும், அவர்களனுஷ்டானத்தால், அவ்வறிவிலார் போலுமாகின்றனர். கல்வி யறிவுளார்க்கு இலக்கணம், பலவகைச் சமயத்துள் எவ்வகைச் சமயத்தரேனும், அச்சமயத்திற்கேற்றவாறு, நடையுடைபாவனையிற் சிறந்தவராதல் வேண்டும். அவ்விதமுளார், இச் சைவசமயத்துள், ஓடியோடித் தேடிப்பிடிக்கினு மிகச்சிறுபான்மையராகவே தெரிகின்றது,

ஏதனுலென்றால்?

பெரும்பாலுஞ் சைவசமயக்கொள்கையிற் சிறந்தவர்கள்,கல்வியறிவு, புராணவாராய்ச்சி, சமய தீக்ஷை, சமய வொழுக்கம், தெய்வபக்தி,மடாதடவாலயத் திருப்பணி, முதலாயவற்றைச் சன்மார்க்க நெறிக்கேற்றவாறு செய்தும், மற்றெதினும் சற்றும் குற்றமற்று ஜீவகாருண்யப் பற்றுடையோராயினும், அடியிற்கூறும் எங்கள் முறைப்பாட்டால், எங்கள் மாட்டு அப்பற்றுடையோரென்று முற்றுய்ச் சொலற்பாலதா? இல்லை.

ஏனெனின்; அவர்கள் புலாலை மிக்க அன்போடு ஆதரித்து, இமைக்குள் வதைத்துச்சிதைத்து, சுவையாயமைத்து, சமைத்துப் புசித்துவருகின்றார்கள்.

> "புண்ணிய வசத்தினுற் செல்வமது வரவேண்டும்,
> பொருளை ரக்ஷிக்கவேண்டும்,
> புத்தியுடனது வொன்று நூருகவேசெய்து
> போதவும் வளர்க்கவேண்டும்." என

'அம்பலவாணக் கவிராயரவர்கள்' கூறியதற்கிணங்கிய நடையுடை பாவனையிற்சிறந்தவர்களும்,எக்காலத்தினும் வழக்கமாகச்சைவசமய வொழுக்கத்திற்கு விரோதமானப்புலாலைப் புசித்துவருவதும் தவிர, தங்கள் தங்கள் வசிக்கும் ஊர்களிலும் சிவாலயத்திருப்பணிகள் செய்வித்து, அதற்குற்சவாதி முதலியன நடாத்திவருகின்றார்கள்! அங்ஙனம் நடத்தும் உற்சவ வைபவங்களைப்பார்த்தானந்திக்க தம் சுற்றத்தார் முதலிய உறவினர்களை அழைப்பதும் வழக்கம்.

அம்மட்டோடில்லை: அந்தோ! அந்தோ!!அவ்விழாவைக் கண்டு களிக்கும்பொருட்டேராளமாய் வரவழைத்த, தம் விருந்தினர்களுண்டு மகிழவேண்டுமென்றுன்னி, இவர்கள் வசிக்கும் நாடுகளிற் சிலர் கொல்லுந் தொழிலைத் தற்கால ஜீவனோபாயமாய்ச்செய்து வரும் மகம்மதியர்களைக்கொண்டு, எங்கள் வகையறுக்களை வதைக்கச் செய்ய அவர்களங்ஙனமெங்களைத் தூக்கிற் போட்டாற்போல் தலைகீழாகத் தொங்கவிட்டுத் தோலையுரித்து, மாமிசத்தை வேறு வேறாய்க் களைந்து, கூறு கூறாக்கி விற்க ஏற்படுத்திய விலை என்ன

சொல்லினும் சலியாதுஉனக்கெனக்கென்று ஒருவர்க்கொருவர் வண்டரைப்போல்ச் சண்டையிட்டாவது வாங்கிப்புசிக்கின்றார்கள் எங்களை இவ்விதம் சிகைஷ செய்வதும் அவர்களினிச்சையினாலன்றோ? இது சைவ சமயக்கொள்கைக்கு முறையாமா? இவ்வழக்கமவரவர்கள் வசிக்குமெல்லாவூர்களினும் நடைபெறுகின்றது. அவ்விதம் நடக்குமுற்சவங்களில் எங்கள் வினாசம் எவ்வளவென்றறிய விரும்புவோர், எங்கள் கணக்கப்பிள்ளையாகிய மகமதியச்சித்திரபுத்திரரிடமிருக்கும் கணக்கையுற்று நோக்கினால் தெற்றெனப்புலப்படும். அல்லது அதிற்றப்பிப்பிழைத்த எங்கள்இனத்தாரைக்கேட்டால்த்தெரியும்.

மடதடவாலய கைங்கரியம் நன்மைக்கா அல்லது தீமைக்கா? குளிக்கபோயுஞ்சேற்றைப் பூசிக்கொள்வாருளரோ? நாளடைவிற் செய்வது பொதுவாக முடியும். உற்சவாதியால் ஏககாலத்தில் ஏற்படும் ஜீவவதை எக்காரணம் பற்றியோ? அக்காரணத்திற்கு கர்த்தா யாவரோ? அவரைச்சாருமென்பது என் தோன்றவில்லை? திருவாலயவுற்சவாதிகள் செய்வது நன்மைக்காமென்றுன்னிய விஷயம்அவர்களையறியாமலே தீமையாய் முடிகின்றது.

தற்காலத்திற் செல்வவந்தராயும், சத் கைங்கர்யத்தையே கடைபிடித் தொழுகுபவர்களாயுமுள்ள புண்ணிய சீலர்கள், இவ்வழக்கத்திற்குடன்படல் சாலவும் வியக்கத்தக்கதே! இவ்வளவு மேன்மையுடையோரிவ்விதம்செய்யின், மற்றேனையோர் செய்வதைக் கேட்பானேன்.

### வாயுரை வாழ்த்து.

1. 'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
   எல்லாவுயிருந் தொழும்.'
2. 'அறவினையாதெனிற் கொல்லாமைகோறல்
   பிறவினை எல்லாந்தரும்,'
3. 'தன்னூன்பெருக்கற்குத் தான்பிறிதூனுண்பா
   னெங்ஙனமாளுமருள்,'
4. பொருளாட்சி போற்றாதாற் கில்லை யருளாட்சி
   யாங்கில்லையூன் றின்பவற்கு.' என

எம்மதமும் சம்மதமாய் ஏற்றுதற்கூறிய மாதானுபங்கியாரெனும்.

"வள்ளுவர் செய்திருக்குறளை மறுவற நன்குணர்ந்தோர்க ளுள்ளுவரோ, மநுவாதி யொருகுலத்திற்கொரு நீதி, மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தின் மாண்டோர்கள். கனஞ்சடையென்றுருவேத்திக்கண் மூடிக்கதருவரே." என்னும்

அணிநலஞ் சிறக்குமின்னூலே முன்னூலாகப்போற்றிவரு மதியுளார் அந்நூலினுண்மையை என்னவினிமையாகக் கூறியிருக்கின்றார்கள். இதற்கு எதனையுவமையாகக்கூறினும் அதுபுகழாமோ? அறிவுறுத்து மிந்நூலை நன்றாராய்ந்தால், நுங்கட்குவேண்டும் மோட்சசாதனத் திற்கு முதன்மையாயுள்ள ஜீவகாருண்யத்தினுண்மைவிளக்கும்.

இது நிற்க, சைவசமயத் தொருவரைப் பிறர் நீவிரெச்சமயத் தினர் என்று வினவினால், யாம் சைவசமயத்துளோ மென்றுரைக் கின்றனர். சைவசயமென்றாலென்னே? ஜீவகாருண்யமில்லாமற்கண் டபடி வேண்டும்போதெல்லா மெங்களைப் பற்றிச்சென்று மடக்கிக்கீழே தள்ளிக் கதறக்கதறக் குரல்வளையைக் கரகரவென்றறுத்து ஊட் டியை ஒடித்து, ஒரு திவலை இரத்தமேனும் கீழே சிதறாவண்ணம் பிடித்துப் பாகம்செய்து, அது நன்றிதுநன்றெென வருந்துகின்றார் களே, இதுதானா சைவசமயம்?

"அம்மாவெனவலற வாருயிரைக்கொன்றருந்தும்
இம்மானிடரெல்லாமின்புற்றிருக்கின்றார்
அம்மாவெனும் சத்தம்கேட்டகன்றமாதவர்க்கும்
பொய்ம்மாநிரையமெனிற்புசித்தவர்க்கென்சொல்லுவதே."

என்று ஆன்றோர் கூறியதைச்சற்றுணரப்படாதா? உங்களுக்கி ரக்கமில்லையா? மனைவிமக்களுடன்வாழ எவ்வளவு பேராசையுற்றிரு க்கின்றீர்கள், அதுபோல் யாங்களும்வாழப்படாதா? உலகத்துள்ளார் யாவர்கட்கு மெவ்வித இடுக்கணுஞ் செய்யாதஎங்களைக்கொன்றரு ந்துவதைப்பார்க்கினும், வம்ச பாரம்பரையாய் உங்கட்கு விரோதி யாயுள்ளஎங்களில் ஓர்சார்பான புலி, கரடி, யானை, சிம்மம்முதலாயுள்ள துஷ்டமிருகங்களைக்கொன்றருந்தக்கூடாதா? அது மாமிசமில்லையா?

உங்கள்ஜம்பம் அவைகளிடத்திற்பலிக்கவில்லையே? ஏழையாகியயாங்கள் தானுவகப்பட்டோம்? 'எளியாரைவலியார்அடித்தால்,வலியாரை தெய்வமடிக்கும்' என்பது ஞாபகமில்லையோ?

கல்வியறிவிலா மக்கள்தாமிப்படிச் செய்கின்றனரெனப் பிரித்து பேசுவோமென்றாலுமதற்குமிடமில்லையே! சைவசமயநெறிக்கேதுவாய சைவதீட்சை,இதிகாசபுராணவாராய்ச்சிவேறெவ்விதநல்லொழுக்கமுடையவருமிவ்வழக்கத்தைக்கைவிட்டிலர், இவர்கட்குஜீவகாருண்யம், பச்சாதாபம்,இல்லாததின்காரணமென்னே? அவர்கள்செய் தவக்குறையோ அல்லது யாங்கள் செய் பவமோவறியோம். இவ்வண்ணம் நீண்டகாலமெங்களைச்சரிபண்ணுவதும் தவிர ஒவ்வொருகாலங்களிற் காளிக்கென்றும் கூளிக்கென்றும் அவரவர்களின்உற்சவாதியைச்சாக்கிட்டேராளமாய்ச்சரிபண்ணுகின்றனர். மேற்படிகாளி, கறுப்பன்,காட்டேரி, பிடாரி, மாரி முதலானவர்கள்எங்கள் குலத்தைக்கெடுக்குங் குலதெய்வங்களாய்முளைத்திருக்கின்றார்கள். அவர்களினுற்சவாதிவந்துவிட்டாலோ எங்கட்கு பிளேக், அம்மை, பீதிவந்தாற்போல; யெங்கள் குலமடியோடு நாசம். இதுநிற்க;

ஒரு குடும்பத்தில் யாருக்காவது உடம்பு கொஞ்சம் வெதுவெதுப்பாயிருந்தாற்போதும், உடனே மேற்படி காளி முதலான தெய்வங்கட்கு எவ்வகையிலும் நிரபராதியாயுள்ள எங்களைப்பலியிடுவதாய்ப் பிராத்தித்துக்கொள்ளுகின்றனர். இவர்கள் பிரார்த்திக்க ஒருக்கால் மறந்துவிட்டாலோ நாடெல்லாம் சோடங்கிக்காரர்கள் ஏராளம். அவர்கள் எல்லாம்தெரிந்தவர்களென்றும் சுவாமியேபிரசன்னமாகி நேரில்சொல்வது போலு மெண்ணி, கேட்கப் போந்தவர்கள், வாயிலானும், சிரக்கம்பத்தானும், கோரிச்சென்ற விஷயத்தை நோக்கத்தாலறிந்து, மாரியாத்தாளுக்குகிடாய்வெட்டி பூஜை போடுவதாய் முன்பிரார்த்தனைசெய்திருந்தார்கள்; அதைச்செய்யமறந்துவிட்டதனால் உங்களுக்கு ஞாபகம் வரும்படி ஆத்தாள்தான் செய்திருக்கிறாளென்றும், ஆதலால்இந்த வெள்ளிக்கிழமை கொஞ்சமும் தாமதமின்றிச் செய்துவிடுங்கள், சௌக்கியமாய்ப் போய்விடுமென்று உறுதிகூற வருதிவாங்கிக்கொண்டு, அதுபோற் செய்து

முடிக்கின்றனர். எங்களுக்கு இப்படியும் சனியன் பிடிக்குமா? வீட்டிலொருவருக்குமொன்றும் செய்யவில்லை; உடம்புதான் கொஞ்சம் சூடாயிருந்தது; அதில் நிகழ்ந்த விஷயமென்னவென்று உற்று நோக்கின், உங்களுக்குப் பொருள் நாசம், எங்களுக் குயிர் மோசம். இப்படிக் காரியம் முடிக்கும் வல்லவர்களுக்குப் பெயர் "கோடங்கியாம்" இப்பெயர் வாய்த்ததவர்கள் செய்கைக்குறியதே! "கோடாங்கி" என்னும் பெயரைப்பிரித்துப் பொருள் நோக்கின் "கோள்தாங்கி" குற்றம் பொருந்தியவர்; அதாவது பொய் சொல்லுகிறவர்களென்றே பெறப்படும்.

கொல்லனனரைப்புரட்டன் கோடங்கி முழுப்புரட்டன்
வல்லவனும் வண்ணானோர் கால்புரட்டன்— சொல்லறிய
தட்டான் புரட்டு முக்கால் தறுதலைக்கே எப்போதும்
மட்டில்லை என்றே — — — மதி.

இக்கவியால் மற்றவர்கள் பொய்யினும் கோடாங்கி பொய்யே அதிகமென்பது வெளிமலையாம்.

இத்துடன் மந்திரவாதியையும் சேர்த்துக்கொள்ளலாம். அவர்களுமெங்களுக்கோர் தந்திரவாதிதான். எங்களைப் பலியிடுவதால் வியாதி சொஸ்தமாகுமென்றறிந்தவர்கள் மேற்படி தெய்வங்கட்கு எங்கள் பலியைக்காட்டினும் நரபலி மிக்கப் பிரீதி யென்று சொல்லிக்கொள்ளுகின்றார்களே. ஏனப்படிச் செய்திலர்?

"உங்கள் மக்களும் நீங்களும் நோய்கொள
எங்கள் மக்களும் நாங்களுமென்செய்தோம்
பொங்கலிட்டுப் புதுமணஞ்செய்குறீர்
எங்கள் பாவமிறையவர் கேட்பரே." என்றபடி

இக் கொடுமையைக் கடவுள்தான் அறியவேண்டும்.

இது நிற்க, இன்னும் சிலவற்றைஅறிந்தமட்டும்கூறுகின்றோம். எக்காலத்தேயாயினும், எவரிடத்தேனும் எத்தெய்வங்களும் எங்கள் பலி வேண்டுமென்று கேட்டதுண்டா? உங்களுடையச் சபல சித்தத்தினால் உங்கள் மனோபீஷ்டத்தை யத்தெய்வங்கள் நிறைவேற்றுவ

தாயுள்ளி, இக்கொடுஞ் செய்கைக்கு ஆளாகின்றீர்கள். இச்சரீரம், நீங்கள் செய்த நல்வினை. தீவினைக்கீடுபடவெடுத்ததாகச்சே, தீவினைப் பயனையின், நோயினுலோ அல்லது வறுமையினுலோ, மற்றெதினுலே யாயினும் வரும் துன்பங்களை யனுபவித்தேதீரவேண்டும்.

"செய்த வினையிருக்க தெய்வத்தை நொந்தக்கா (லெதுவும்)
யெய்தவருமோ?" யென்றதறியீர்களா?

உலகத்தில் பற்பல தெய்வங்களிருப்பதாயும் அத்தெய்வங்கள் ஏதோ நினைத்ததெல்லாம் தருவதாயும் எண்ணுகின்றீர்கள்.

"யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே மாதொரு பாகனுர் தாம் வருவர்" என்று மேலோர் கூறியுளார். அப்படி தெய்வ மொன்று பலவாயினும் எக்காரணத்திற்காக எம்முகூர்த்தத்தைக்கொண்டனவோ அம்முகூர்த்தத்திற்கேற்ற அதிகாரத்தைத்தான் செய்யும். உங்கள் வேண்டுதலுக்காக வரம்பு கடந்து ஒன்றும் செய்யமாட்டாது.

ஒரு நாடகத்தில் ஒருவர் சமயோசிதம்போல் பல வேஷங்களைத் தரித்துக்கொண்டுவந்து, அந்தந்த வேஷத்திற்கேற்ற முறையை யனுசரித்துக் காண்பிக்கின்றார். அதற்குமேல் ஒன்றும் செய்யவில்லை. அப்படிப் பல வேஷம் தரித்து வந்து பலவகையான விஷயங்களைச் செய்துகாண்பித்தவர் ஒருவரா அல்லது பலரா? அஃதேபோல் தெய்வங்களெல்லாம் ஒன்றேயாயினும் முகூர்த்தங்கள் பலஉள. அம்முகூர்த்தங்களில் சாந்த மூர்த்திகளென்றும், உக்ர மூர்த்திகளென்றும், இரண்டுவிதம் சாந்தமூர்த்திகளென்பர் ஈஸ்வரன் முதல் இன்னும் சிலர்: இவர்கள் எதையும் ஆக்கவும் அழிக்கவும் கூடும். முன்னொரு காலத்தில் சிவபிரான் மார்க்கண்டேயருக்கு வயது பதினறென்று அளித்தருளினர். பிறகு அவன் பக்திக்குள் அகப்பட்டவராய் என்றும் பதினறுகவளித்தார். இதனுல் அவன் பக்தியையும் சிவபிரானது சக்தியையும் விளக்குகின்றது. கதையை விரிக்கிற் பெருகும். அப்படிச் சர்வவல்லமையுடைய சாந்த மூர்த்திகளை வழிபடுபவர்கள் சைவ சமய சன்மார்க்கத்தையனுசரித்து, நன்மார்க்க பூஜையாகிய உத்தம பூஜையில்

புத்தியைச்செலுத்தி, அதனுல் இகத்தில் சகல சுகங்களையுமனுபவித்துப்பரத்தில் மோக்ஷ சாதனத்தையுமடைவார்கள்.

உங்கள் ஔவைப்பிராட்டியாரும் என்ன சொல்லியிருக்கின்றார்;

"சிவாயநமவென்று சிந்தித்திருப்போர்க்
கபாயமொரு நாளுமில்லை—உபாயம்
இதுவே மதியாகும் இல்லாதவெல்லாம்
விதியே மதியாகி விடும்." என்று கூறியுளார்.

பற்பல தெய்வங்கள் உண்டென்பது அறியாமல், தெரியாத்தனமாயுளரினரா? சாந்த மூர்த்திகளையும், உக்ர மூர்த்திகளையும், வழிபடுவதிலுள்ள வேற்றுமை, ஆற்றைக் கடக்க யானை வாலைப்பிடித்தவனையும், ஆட்டு வாலைப்பிடித்தவனையுமொக்கும்.

உக்ர மூர்த்திகளென்பது, காளி, கறுப்பன், முதலாயினோர்களும், அவர்களுள் இன்னும் சிலரும். இவர்கள் இந்தக் கலியுகத்தில் அக்கிரமம் அதிகரித்திருப்பதால், அதனைக் கண்டித்தடக்கும் வண்ணம் ஏற்பட்டவர்களாய்த் தோன்றுகின்றது. அவர்கள் ஒவ்வொரு காலங்களில், பிளேக், அம்மை, பீதி, முதலானவைகளையும் புதிதுபுதிதாய் இன்னும் அனேக் நோய்களையும் உலகத்தில் பிரவேசிக்கச் செய்வதற்கு அதிகாரமுள்ளவர்களாயிருக்கின்றார்கள்.

அதனுல் அம்மூர்த்திகளை வழிபடவேண்டுவதும் அவசியமே. அம்மையாரும் "தெய்வஞ்சீறிற் கைதவமாளும்" எனக்கூறினர். அப்படி வழிபடாவிட்டால், இன்னும் மேற்கெடுதிகளைச் செய்வார்களோ அறிகிலோம். ஆனதால் அவர்களைச் சாந்தமான நிலையிலே வைத்துக்கொள்வதும் உரியதே. அதற்காக அந்நோய் வந்து பிரவேசித்த காலங்களில், ஏங்களை வெட்டிப்பலியிடுகின்றீர்கள். அதனையாராயுமிடத்து அந்நோய்கள் உங்கட்கு வந்ததாயில்லை, எங்கட்கே பிரதிபலிக்கின்றது. மேற்சொல்லிய நோய்கள் வந்த காலங்களில், மேற்படி தெய்வங்கட்கு, குளிர்த்தி செய்யவேண்டுமென்று எல்லோரும் பேசிக்கொள்கின்றார்கள். [illegible] மேற்படி உக்ரமூர்த்திகள் உங்களிடம் [illegible]மாய் இருப்பதாக எண்ணித்தானே சொல்லுகின்

ளூர்கள். ஒருவருடைய கோபத்தை மாற்றவேண்டுவதேயானால் பல வகையுபசாரங்களாலுந் தாழ்மையான செய்கையாலுந்தானேமாற்ற வேண்டும். அதுபோல் அத்தெய்வத்தின் கோபத்தை மாற்றவேண்டுமாயின், அதற்காக ராக்ஷச பூஜையாகிய அதம பூஜை செய்து வழி படுவதால் அவர்களுடைய கோபம் மாறிவிடுவதுமுண்டோ?

இவ்வித அதம பூஜையைச்செய்து வழிபடுவதைப்பார்க்கினும், நல்ல வாசனைத்திரவியங்களாலபிஷேகம் செய்து, நற்கந்தமுள்ள சுகந்தங்களைச்சாத்தி, மதுரமாகிய கனிவர்க்கங்களும் சுவையுள்ள பக்ஷணங்கள் முதலானவைகளை வைத்து பூஜைபோட்டால், அத்தெய்வங்கள் ஏற்றுக்கொள்ளமாட்டோமென்றதா?

உலகத்தில் இராஜநீதி, தெய்வநீதி என்றிரண்டுள. அதிற் கொலை களவு, முதலாய கொடியபாதகங்களையொருவன் செய்தானேல், அதனைத்தாம் அறிந்தமட்டுமே சிக்ஷிப்பன் அரசன். தெய்வமப்படியன்று. அரசனாலும் மற்றவர்களாலும் அறியப்படாத குற்றங்களையுமறிந்து, அதில் மிகுதியாகிய குற்றங்கட்குத்தகுதியான தண்டனை விதிக்கும் சக்தி அத்தெய்வத்திற்குண்டென்பது பாமரர்கள் முதல் பண்டிதர்கள் வரையறிந்ததே. அவ்விதமிருக்க 'மறையப்போயும் தலையாறி வீட்டில் மறைந்தாற்போல்' கொஞ்சமும் அஞ்சாமல் அத்தெய்வத்திற்கு முன்பாகவே, எங்களை வெட்டிப்பலியிடுகின்றீர்கள். ஆனாலிதற்குச்சாக்ஷி வேண்டுவதின்று. இவ்வாறு செய்வதற்குஅத்தெய்வம் ஒத்திருப்பதுமுண்டோ? இதனை ஈண்டு ஊன்றி உய்த்துணருங்கள். அரசன் அன்றறுப்பன் தெய்வம் நின்றறுக்கு மென்ற பழமொழியுமுண்டு.

இன்னும், உங்களின் எண்ணமெப்படியோ அப்படியே ஆடு கோழி வெட்டுகின்றீர்கள். வெட்டினவுடன் அதற்கு கட்டிவராமல் சட்டி அடுப்பில் கெட்டியாயிருக்கின்றது. அதற்குள் ஒருகுழந்தை இரத்தப்பொரியலுக்குத் தூக்கிக்கொண்டே திரிகின்றது. மற்றொரு குழந்தை சூட்டான் கறிக்குச்சாஷ்டாங்கம் பண்ணுகின்றது. மூலையிற்கிடக்கும் கிழவர் மூளைபொரிக்கவில்லையாவென்று முக்கிக்கொண்

டிருக்கின்றார். அவர் என் செய்வர் பாவம்? பற்களில்லை. வீட்டிற்கெஜமான் சமையலாகிமுடியும் சமயத்தையெதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றார். எதிருக்க நாளைவாவென்றாலும், தோலைக்கொடுக்க வேணுமிதுதாவென்று, இராவுத்தர் தாடியையுருவிக்கொண்டு தயாராய் நிற்கின்றார். இதில் அந்தெய்வமடைந்த பலனென்னை? நீங்கள் நன்றாலோசித்துப்பாருங்கள்.

ஈதொருபக்கமிருக்க இன்னமோர் கொடுமையான கார்யம் நடைபெறுகின்றது. அதற்கு பூசாரிகளும், மந்திரவாதிகளுங் கங்கணங் கட்டிக்கொண்டிருக்கின்றார்கள். அவர்களிடம் போய்த்தங்களுக்கேற்பட்டிருக்கும் சிலதுன்பங்களைச்சொன்னால், அதற்குப்பூசாரிபேய்க் கோளாறிருப்பதென்றும், மந்திரவாதி கிரஹ தோஷமிருப்பதாயும், வாய்ப்பிடியால் அவர்களை மடக்கி, அதற்குக் களிபூஜை போட்டால், எல்லா தோஷங்களும் நீங்கிவிடுமென்று கூறி, பூசைபோடும்படிசெய்கின்றார்கள். அப்பூசையில் நிகழும் விஷயங்களைக்கேட்டாலே மனந்திடுக்கிடுகின்றது. மற்ற சாதாரண பூசைக்குத்தான் யாங்கள் பாத்திரமாயிருக்கின்றோம். இக்களிபூசையாகிய பெரும்பூசைக்கு எங்களோடு போகவில்லை. எங்களில் பெண்பாலாயுள்ள ஆட்டில் சூல் நிறைந்ததாய் இருக்கவேண்டுமாம். அச்சூலாட்டை வயிற்றைக்கிழித்து அதனுள்ளிருக்கும் சிசுவை வெளிப்படுத்தி என்னென்ன கொடுமைகளோ செய்கின்றார்களாம்.

இந்த ஸ்ரீஹத்தியோடு சிசுஹத்தியும் சேர்தலால் இதை விட மேலான புண்ணியம் வேறொன்றுமில.

"கோவதைகள் நூறுபழி செய்யிலொரு வேதன்
வேதனர்கள் நூறுபழி செய்யிலொரு பாவை
பாவையர்கள் நூறுபழி செய்யிலொரு பாலர்
பாலர்களை நூறுபழி செய்யிலொரு பொய்யே.

நூறு பசுவைக்கொன்றால் ஓர்பிராமணனைக்கொன்ற தோஷமென்றும் நூறு பிராமணனைக் கொன்றால் ஓர் பெண்ணைக்கொன்றதோஷமென்றும், நூறு பெண்களைக்கொன்றால் ஓர் குழந்தையைக்கொன்ற தோ

ஷமென்றும், நூறு குழந்தைகளைக்கொன்றால் ஓர் பொய் சொன்ன தோஷமென்றுங் கூறியுள. பொய்யும் பஞ்சமா பாதகத்திலொன்று தான். இதனையுணராது இக்கொடிய செய்கைக்கு இம்மூவர்களும் உட்படல் ஞாயமாமோ? இவ்விதம் செய்ய அவர்கள்மனம் எவ்விதம் இடம் கொடுக்கின்றதோ?

இதுதானு தோஷம் நீங்குவதற்குச்செய்வது. இது தோஷ மல்லவா? இத்தோஷம் நீங்குவதற்கினியென் செய்வார்களோ தெரி கிலோம்.

ஏ! அறிவாளிகளே !! இப்படிச்செய்யும் கெட்ட பழக்கத்தை விட்டீர்களானுல் மட்டிலாத செல்வத்துடன் கஷ்டமிலாது வாழ்வீர் கள். 'பெரிமிவு, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு, ஆறுங்கருவில மைத்தபடி' என்றதை அறியீர்களோ? சித்தம் சுத்தமதைச்சுத்த மாக வைத்து, ஈஸ்வர பசும் செய்தால் எதுவும் சித்தியாகும். ஆத லால் நல்ல புத்தியுடன் முத்திதருவதில் முயன்றால் வெற்றியடைவீர் கள். இதைச்சத்தியமாகச்சொல்லுவோம்.

இன்னும் உலகத்தில் ஒருவர்க்கொருவர் சிநேகம்பாராட்டி, யோக க்ஷேமங்களை விசாரித்துக்கொண்டு பிரியும்பொழுது, ஒருவர் மற்றவ ரைப்பார்த்துமறந்துவிடாதீர்கள், மறந்துவிடாதீர்களெனப்பன்முறை கேட்டுக்கொள்கின்றார். அதற்கு அவர் முகநட்புக்காகவாவது ஒருக் காலும் மறப்பேனு? மறக்கமாட்டேனென்று சொல்வது வழக்கம். அவ்விதம் எங்கட்கும் உங்கட்கும் எப்போதாகிலும் ஸ்நேகமாவது, மற்றும் வேறு தொடர்ச்சிகளாவது எங்களை மறந்துவிடாதீர்களென கேட்டுக்கொண்டதாவதுண்டா? அஃதில்லாதிருந்தும் சதா ஆடு கோழி, ஆடுகோழி என்று உங்கள் ஞாபகத்தை எங்களிடத்தே வைத்து அகநட்பாகவே உருச் ஜெபித்து வருகின்றீர்கள்.

இதென்ன யாங்கள் கூறுவதும்பொய்யோ!! அப்படியொருக்கால் பொய்யென்று நினைத்தாலும் நினைப்பீர்கள். அதற்கோருதாரணம் பாருங்கள்: உங்கட்கேற்படும் நன்மை தின்மை மற்றெல்லா விசேடங்

கட்கு, ஜாப்தாபண்ணும்பொழுதே யெங்களை மறக்கவில்லை. அச்
ஜாப்தாவிலேயே எங்களையும் ஓர் வரிசையிற் கண்டிருக்கின்றீர்கள். அப்
படிக்கிருந்தும் அவ்விசேஷத்திற்குக் கர்த்தாவாயுள்ளவர், அவசர
நிமித்தம் ஒருக்காலெங்களை மறந்திருந்தாலும், அவ்விசேஷத்திற்
காக அங்கு வந்திருக்கும் அனைவர்களும் எங்களை மறக்கமாட்டார்கள்.

அவர்களெல்லோரும யாங்கள் வாராததைக் கவனித்தவர்களாய்' "ஆடெங்கே? கோழி எங்கே? ஆடு ஏன் வரவில்லை! கோழி ஏன் வர
வில்லை"? என்று எங்களை சுற்றத்தார்கள்போல் எண்ணி விசாரித்துச்
"சீக்கிரம் கொண்டுவாருங்களென்று" சொல்லுகின்றார்கள். ஆக அத்
தனை பெயர்களுக்கும் எங்கள் ஞாபகம் இல்லாதிருக்கவில்லை. எந்த
விசேஷங்களினும் எங்களைத் தள்ளி நீங்களாக முடித்ததுண்டா?
ஏழையாகிய எங்கள்பேரில் இவ்வளவு கருணை வைத்திருப்பதும் யாங்
கள் செய்த புண்ணியமே. இதற்குப் பிரதிபலனாக உங்கட்கு யாங்
கள் என் செய்யப்போகின்றோம். தீனதயாபர மூர்த்தி யென்றும்,
தீனரக்ஷகரென்றும், தீனதயாளுவென்றும் சொல்லுகின்ற சிவபிரா
னே நன்மை செய்வாரென நம்புகின்றோம்.

இன்னும்சிலர் அவர்கள் புத்திரர்களுக்கு ஆபரணம்பூட்டி அழகு
பெறச்செய்வதேபோல் எங்களுக்கும் மணி, வாளி, தண்டை, அரசிலை
முதலிய ஆபரணங்களைப் பூட்டி யாங்கள் தின்னும் தழைவகையுண
வுப்பொருள்களையூட்டிக் கொழுப்பேற்றி வெகு அன்புடன் வளர்த்த
எண்ணமெப்படியோ, அப்படியே மேற்கூறிய தெய்வ சன்னதியிற்
கொண்டுபோய் நீராட்டி, மஞ்சள்பூசி, மாலைபோட்டு, தூபதீபம்
காட்டி "சீராளனை அவன் மாதா பிதாக்களெவ்விதம் செய்தனரோ"
அதேபோல் புருடன் பெண்சாதிகளிருவரும் காலையும் தலையையும்
பிடித்துக்கொண்டு, அம்மே, அம்மே, என்றலற அலற அறுத்துப்பலி
யிடுகின்றார்கள். இக்கொடுமை அப்பலி ஏற்கும் தெய்வத்திற்குத்
தான் சம்மதமாமோ? இவ்விதம்செய்யக் கொஞ்சநேரத்திற்குமுன்
எங்களை எத்தனைதரம் முத்தமிட்டிருப்பார்கள். அப்படி இருக்க
'இப் டிச்செய்ய' எப்படிச் சித்தமிரங்கியது! இன்னும் சில வா
லிபர்கள் எங்களையொன்றுக்கொன்று சண்டைமூட்டி வேடிக்கை

பார்க்க, மேற்கூறியவண்ணமே வளர்த்து ஒருவர்க்கொருவர் விருது கூறிப்பந்தயம்கட்டி, மந்தையில்விட்டுச் சந்திசிரிக்கப் பண்ணுகிற போது, கொஞ்சமேனும் அறிவில்லாத மூடத்தன்மையுடையயாங்கள், மூக்குப்போன செவ்வைக்குக்கோபங்கொண்டு, தாக்கி, மண்டையுடைந்தாலொழியச்சண்டையை விடோம். எங்களின் மடத்தனத்தையறிந்தவர்கள்இதுமட்டும் தானுசெய்வார்கள்?

இன்னும் சில அறிவினமுற்றவர்கள், 'கொன்றால்ப்பாவம் தின்றால்த்தீரும்' எனப்பின்னுள்ளார்கட்குப் போதிக்கின்றனர்; அக்கருத்திநுண்மையறியார் :

கொன்றவன் குறைத்தவன் கொணர்ந்து விற்றவன்
ஒன்றிய பொருள்கொடுத் துவந்து கொண்டவன்
நன்றடு மடைமகன் நாவிற் பெய்தவன்
என்றிவர் அறுவருமா நரகி லெய்துவர்,

என்னும் இக்கவியின் பொருளை நன்குய்த்துஉணர்வாராயின், மாமிசமென்னும் நாமத்தைகயேனும் தாம்மடிந்து மண்ணுகும்வரையும் எண்ணுவரோ? இக்கவியிலறுவரைமட்டும் குற்றம் கூறியிருக்கின்றது : கொல்லுதற்கு காரணகருவியாயுள்ள ஆயுதம், அரிவாள் அல்லது கட்கம். இவைகள் செய்தளிக்கும் தொழிலாளராகிய புண்ணியசிலர்களையும்சேர்த்து எழுவராகச்கூறவேண்டியதிருக்க அதைநீக்கிக்கூறியது, இக்கவிக்கோர் குறையாம்.

ஆயுதம் செய்தளிக்கும் தொழிலாளரிற்சிலர் தங்களை உயர்வாகச் சொல்லிக்கொள்வதேயல்லாது மற்றவர்கள் எங்கள் வகைபறுக்களை சிதைத்துத் தின்றால் தாங்கள் முழுசாய் விழுங்குகின்றார்கள் இச்சிலருக்கு இவ்வுயர்வுப் பெயரெங்ஙனந்தங்கும்.

"அந்தணரென்போரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுகலான"

என்னும் தமிழ் மறையை ஒருதரமேனுமுசாவிச்சிந்தித்திருப்பரேல், அந்தணரென்று சொல்வதின் கருத்து இன்னதெனப்புலப்பட்டிருக்கும்.

இன்னும் சிலமதியில் மிருந்த முதியோரும், நாமா கொலை செய்தோம், பிறர் செய்ததைப்புசித்தாலென்ன? பாவம் நமக்கில்லை என்றும் சொல்வதோடு மாமிசம் மிக்க சுவையுளதென்றும் புகலுகின்றார்களாம்,

"கொன்றிலாரைக்கொலச்சொல்லிக்கூறினோர்
தின்றிலாரைத் தினச்சொல்லித்தெண்டித்தோர்
பன்றிபாய்ப்படியிற்பிறந்தேழ்நர
கொன்றுவாரரணீனை ஈறுண்மையே."

இச்செய்யுளையுணரார்போலும். மாமிசமிக்க சுவையுளதென்று சொல்லும் மாந்தர்களே: உங்கள் கருத்தின்படி இம்மையில் மாமிசம் மிக்க சுவையெனக்கொள்ளினும் மறுமையில் அதற்கேற்படும் பயனைக் கீழ்வரும் 'சிவஞான தீபச்செய்யுளிற்' கூறினமையறிக.

எவ்வுயிரும்பராபரன்சந்நிதியதாகு
மிலக்குமுயிருடலனைத்துமீசன்கோவில்
எவ்வுயிருமெம்முயிர்போலென்றுநோக்கி
இரங்காதுகொன்றருந்துமிழிவினோரை
வவ்வியமதூத ருந்தண்டஞ்செய்து
வல்லிரும்பையுருக்கியவர்வாயில்வார்த்து
வெவ்வியதீஎழுநரகில்வீழ்த்திமாறு
வேதனைசெய்திடுவரெனவோதும்நூலே.

ஈதின்னணமிருக்க மாமிசம் மேற்கூறியபடி சுவையானதின் காரணமென்னை? அச்சுவை எதனாலென்பது என் புலப்படவில்லை? அத்துடன் செக்காரும், பலசரக்குவணிகரும், சேரா விட்டால் அதற்குச் சுவை எங்ஙனம்? அதனோடு கூட்டும் சரக்கை மரக்கறி வகையாறுவுடன் கூட்டினால் அச்சுவை இதற்கில்லையோ? நீங்கள் அதையறியாததின் காரணம் உங்கள் வினைப்பயனன்றோ?

'முப்பானிரண்டென மொழியுமறங்களைத் தப்பாமற் செய்யும் தைரியவான்களே: இப்பாரிலெல்லாவறங்களினும் கொல்லாவறமே யறம்'' 'கொல்லா விரதமே விரதம்' எனவுரைக்கும் நூலைத்திறக்க

வில்லையா? எங்களைக் கொன்று கொன்று இன்றுசெய்யுந்தருமம், எல்லாம் தருமமே. 'சட்டப்பானையை விழுங்கிச் சுக்குக்கஷாயம் குடித்தால் தீர்ந்துவிடுமோ', 'பசுவைக்கொன்று பார்ப்பானுக்குத்தானம் செய்தால் கொன்ற பாவம் நின்றுவிடுமா' மனுநீதிகண்ட சோழன்கதை மறதியாயிற்றோ! அச்சரித்திரத்தை மிகச்சுருக்கமாகக்கூறுதும் :

திருவாரூர் என்னும் திவ்ய க்ஷேத்ரத்தில் மனு வம்சத்திலுதித்த "மனுநீதிகண்ட சோழராஜன்" நீதிவழுவாது அரசுபுரிந்து வந்தனன். அவ்வரசனுக்குத்தனது தொல்குலம் விளங்க நல்லரசுக்கேற்ற ஆண்மகவின்றித்துன்புற்றிருக்கும் அவன்மனமகிழ, சர்வவல்லமையுள்ள எம்பெருமானாகிய 'தியாகேசர்' சற்புத்ர சந்தானமளிக்கக்கண்டு, அகமகிழ்ந்து, ஆவல்தீர்ந்து, அப்புதல்வனுக்கு "வீதிவிடங்கன்" என்று நாமகரணமிட்டு, மிக்க அருமையாக வளர்த்து வந்தனன்.

இங்ஙனம் வளர்ந்துவரும் புதல்வனும் ஐந்தாவதாண்டு நிறைந்தவுடன், தம் குலகுருவால் நான்குவேதம், ஆறுசாஸ்திரம், அறுபத்துநான்கு கலைஞானம், தெண்ணூற்றாறு தத்வம், யானையேற்றம், அஸ்வயேற்றம், அஸ்த்ரசஸ்த்ரப்பிரயோகம் முதலியவைகளை ஐயந்திரிபுற, செவ்வனேபயின்று, மிக்க ஆற்றலுடையோனாய், பெருந்தகையாகிய சிவபிரானிடத்தும், ஜீவப்பிராணிகளிடத்தும், அறம், பொருள், இன்பம், அன்பு, புகழ், மதிப்பு, பொறுமைவாய்ந்த பெரியாரிடத்தும் பயபக்தி விஸ்வாஸமுடையோனாகவும்; தயை, பொறை, சாந்தம் முதலிய நற்குணங்கள் நிறைந்து, இளவரசாக இருந்த காலத்தில், ஓர் தினம் தானும் சில சிற்றிளவரசர்களும் தேரேறி அனேக வாத்யகோஷங்களுடன் வீதியிற்செல்லுகையில், தர்ம தேவதையே இவ்வரசரின் வாய்மையைச் சோதிக்கப்போந்தார்ப்போல், அருகில் நின்ற ஓர் பசுவின் கன்றானது வாத்ய ஓசை கேட்டவுடன் அதற்கு ஓர் வித சந்தோஷமுண்டாகி 'இளங் கன்று பயமறியாது,' என்றபடி துள்ளிச்சென்று, தேர்காலினிடைப்பட்டு உயிர்துறந்தது.

இதனை அங்கு கண்ணுற்ற அரசிளங்கோவும் திடுக்கிட்டுப்பய மெய்தி 'இதுவிடயம் நம்பிதா அறிவதன்முன் இதற்கேதேனும் பிராயச்சித்தம்செய்து இப்பழியைத்தீர்த்துக்கொளல்வேண்டும் எனத் துணிந்தான். இதற்குள் கன்றிழந்த தாய்ப்பசு கதறிக்கொண்டோடி, அரண்மனைவாயிலிற் கட்டியிருக்கும் ஆராய்ச்சி மணியைத் தன் கொம்பினாலசைத்து அடித்தது. வேந்தனும் 'யாதுகாரணம் மணியோசை?' யென்று மந்திரி முதலானவர்களை வினவி நிகழ்ந்த விடயம் அறிந்து, மனமயர்ந்து, நெடுமூச்செறிந்து, இப்பழிக்கென்செயலாமென்றுலோசிக்கில், அங்குள்ள பெரியோர்கள் 'அரசே; பிராயச்சித்தத்தால் பழியைத் தீர்த்துக்கொள்ளலாமென்றுரைத்தனர்." அரசனும் மனுநீதி வழுவாத மன்னனாதலால், அதிற் செவிபுகுத்தாது "தற்சமயம் பசு என்ன நிலையிலிருக்கின்றதோ, அதேபோல் யானும் என் புத்ரனை யிழந்து பரிதவித்தாலன்றி இப்பழி தீராது", எனப்புகன்று அமைச்சரையழைத்து தம்அருமைப்புதல்வனைத்தேர்காலிலிட்டு உயிர் துறக்கச்செய்வீரென ஆக்ஞாபித்தனன்.

அமைச்சனும் அவ்வாறு செய்ய மனம் துணியாது, அதற்குத் தன்னுயிர் நீத்தலேதகைமை யெனக்கருதி உயிர்போக்கிக்கொண்டனன். தம் ஏவலினாற் உயிரிழந்த அமைச்சருக்கு மனம் வருந்தி பிறகு அரசனே தேரின்மீதாரோகணித்து, தன் ஏகபுதல்வனைத்தேர் காலிலிட்டு அருமைக்குமாரனின் ஆருயிர் செகுத்தனன்.

அதுகண்டு, கருணைக்கடலாகிய 'தியாகேசக்கடவுள்' அரசரின் ஜீவகாருண்யத்திற்கு உளமகிழ்ந்து இக்காரணத்தால்மாண்ட மந்திரியையும், இளங்கன்றையும் அரசிளங்குமாரனையும், உயிர்த்தெழும்படி கிருபை செய்தனர். தேவர் புஷ்பமாரி பொழிந்தார்கள். அரசனும் ஆனந்தமடைந்து எவ்வுயிரையும் தம்முயிர் போல் பேணி வருமாறு, ஜீவகாருண்யச்சிறப்பைத்தம் குடிகளுக்குப் போதித்து இன்பமெய்தினன்.

ஆகையால் கொன்றுபுசிக்கும் கருமம் நின்றாலல்லவோ உங்கள் தருமம் நன்றாகும். இதையுற்றுநோக்காதுலகத்தீர் சத்திரம், சாவடி, கோவில், குளம், முதலாய பலதர்மங்களைச்செய்தும் பயன் யாது?

ஆனதால் கெட்ட பழக்கத்தை விட்டுவிட்டு நன்மையான விடயங்களைச்செய்ய நாடுங்கள். கடவுள் எல்லாச்செல்வங்களையும் நிறையத்தந்து நீடூழி வாழும்படி கிருபைசெய்வாரென்பதில் எள்ளத்தனையுஞ் சந்தேகமின்றாம்.

இன்னும் மாமிசம் புசித்தால் மிகுந்த பலமுண்டாமென்று அனுபோக ஜீவகாருண்யமில்லாதாரிற் சிலர் கூறுகின்றார்கள். அவ்விதஞ்சொல்லுபவர்களை யாங்கள் பித்தலகிரிபிடித்தவர்கள் என்றே இயம்புவோம். இந்திபாவில், தமக்குச் சமமாகிய பலசாலிகள் இல்லையென்று திக்விஜயம்செய்து கீர்த்திபெற்ற கலியுக பீமனென்று டைட்டில் வாய்ந்த, "புரொபசர் சாண்டோ இராமமூர்த்தி நாயுடு" அவர்களைப்போல பலசாலியானுற் போதுமா? அப்பெரியார் சுத்த சைவர் என்பது உலகப்பிரசித்தம். இவரைப்பார்க்கினும் வேறுசான்றும் வேண்டுமோ?

"மெய்க்குறுதி பாலாவது நெய்யாவது,
கைக்குறுதி வேலாவது வில்லாவது
பற்குறுதி ஆலாவது வேலாவது
சொற்குறுதி நாலாவது இரண்டாவது" என்றபடி

பாலும், நெய்யுமுண்டு, பலத்தையும், திடகாத்திர தேகத்தையும் பெறவேண்டியதை விட்டு, ஊனைத்தின்பது மிகவும் பாதகமல்லவா? இன்னும், பாவத்திற்குக்காரணமான ஊனைத் தின்றதொழித்து, ஜீவகாருண்யத்தின் உண்மையைக் கைக்கொண்டால் ஏகவஸ்துவாகிய இளவல் ஷண்முகப்பெருமான், எல்லாச்செல்வங்களையும் நிறையத்தந்து, இரக்ஷிப்பரென்பது நிச்சயமாய்க்கொள்ளத்தக்கது.

இன்னும் மிகுந்த நோயாளிகட்கு, கோழிச்சூப்பு, ஆட்டுக்கால் சூப்பு, இவைகளைச்சாப்பிட்டால், நோய்தீர்ந்துபோமென்று, நாட்டு வைத்தியர்களும், ஆங்கிலவைத்தியர்களும், இதரர்களும் சொல்லுகின்றார்கள். ஆனுலிப்படி கூறுபவர்களுக்கு யாங்களென்செய்தோம்? அவரவர்கள், செய்த கர்மானுபவம் தீர்ந்தாலொழிய, ஆட்டுச்சூப்பி

ளுலும், கோழிச்சூப்பினுலும், வியாதி சொஸ்தமாகுமென்று கழறு தல், ஜீவகாருண்யமில்லாதார் செய்கையேயன்றி, நன்மார்க்கமுளார் செய்கையாகா?

இதுநிற்க, உத்தமமாகிய பூஜையைப்பற்றி முன்னமே கூறியிருக்கின்றோம். ஆனுலும் இன்னோர் முறையும், சரியான ஆதாரவோடு போதரவாகக்கூறினுல் உங்கள் மனதில் நன்றாய்ப்பதியுமென எண்ணி, பின்னுமுரைக்கலானோம்! அதெனவெனின்:

"வெறிமல ரிண்டைமாலை விரைகமழ் தூயதீபம்
அறுசுவை யடிசிலான்ற வெள்ளிலை பழக்காய்மற்று
முறுகுடை கவரியாதி பூசனைக் குரியவெல்லா
முருகுபே ரன்பினெந்தைக் காக்குவோர் முத்தராவர்"

என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இதன் கருத்தாவதென்னை? பரிமளமிகுந்ததும், குளிர்ச்சியுடையதுமானவைகளால், அபிஷேகம் செய்வித்து, வாசனையுள்ள புஷ்பங்களாலும், இயன்ற வஸ்த்ராபரணங்களாலும அலங்கரித்து, அரிசியினுலேனும், அல்லது அதன் மாவினுலேனும், ஆகிய அன்னமும், சுவையோடுங்கூடிய, பற்பல பலகார வகைகளுஞ்செய்து, நைவேதனம்வைத்து, வாசனைத்திரவியங்களாலான, தசாங்கம் முதலிய கர்ப்பூரங்களாலும், மற்றும் பலவித சோடஸங்களாலும், உபசாரம் செய்வித்து, வில்வங்குங்குமங்களால் அருச்சித்து வழிபடுவோர்கள், ஜீவன்முத்தராவரெனமொழிந்திருப்பதைப்பார்த்தீர்களா:

இவ்வித நல்லொழுக்கங்களற்ற, அனுச்சாரமானவைகளை வைத்து, பூசைசெய்பவர்கள், என்ன முத்தராய்ப் போவார்களென்பதை யாங்கள் சொல்லாமலே நீங்களேயறியலாகும்.



## கோழிகளின் உபன்யாசம்.

உங்கள் மற்கடப்பிடிக்குள் அகப்படுங்குக்குடத்தாராகிய எங்களை ஆராயுமிடத்து ஓராயுதமின்றி உயிர்வேருகும்படி தாராளமாய்க் கொல்லுந்தன்மையைச்சொல்லுவோம். அதில் வல்லவர்களாகிய மிக நல்லவர்களே கேளுங்கள்:

பாம்பு, பூரான், அரணை, பல்லி, விட்டில், புழு முதலாகிய அனேக அநாகரிகமாகிய வஸ்துக்களையும், யாவருடைய மலங்களையும் யாங்கள் தின்றுவருவதை நீங்கள் கண்கூடாகப்பார்த்திருந்தும், எங்களையுண்ணுவதானல் உங்களுடைய யோக்கிதையை எவ்வாறென்றெடுத்துரைப்போம்! உங்களுக்கு அறிவிருந்தும் பிரயோசனம் என்னை? எங்களினும் உங்களைப்பெரிதும் குறைவாகச்சொன்னல், அதனுலென்னும்? மும்மலமறுக்கத்துணிந்த நீவீர் நம்மலந்தின்னுமெங்களை அருந்துவதென்னே அனியாயம்!

"புலையென்னும் புலைதீரப் புனலென்னும் புனல்மூழ்கி
அலைகின்ற முழுமூட ரறிவென்ன அறிவென்ன
புலையன்றன் மலமுண்ணும் எமையுண்ணும் புலையற்கு
குலமென்ன நலமென்ன கூகூவென்றன கோழி."

என்ற, இச்செய்யுளின் கருத்தைத்துலக்கமாகக்கூறுதும்: பஞ்சபாதகங்களில் ஒன்றான கொலைத்தொழிலைப்புரிந்துவிட்டு அனேக புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்வதால், அப்பாதகம் தீர்வதுமுண்டோ? அவர்கள் மதி எம்மதி அது கடவுளுக்குத்தான் சம்மதியாமோ? ஈதிருக்க இன்னும் எங்களில் ஆண்பாலாயுள்ள சேவல்களைச்சிலர், யாதொரு விரோதமுமில்லாதிருக்கும் எங்கள் கால்களில் மிக்கக்கூர்மையாகிய கத்திகளைக்கட்டி, எங்களை யொருவர்க்கொருவர் பகைவராகச்செய்ய, அதனை மதிஈனத்தால் அறியாது யாங்களே யொருவர்க்கொருவர் குத்திக்கொண்டு சாகின்றோம். எங்களுக்கியற்கையாகவே ஏற்பட்டிருக்கும் குணத்தை கீழ்வரும் கவியால் உணர்க.

"வேசியருங் காயும் விதிநூல் வைத்தியரும்
பூசுரரும் கோழிகளும் பொன்னனையீர்—பேசிலொரு
காரணந்தா னின்றியே கண்டவுடனே பகையாங்
காரணந்தா னப்பிறப்பே காண்.

என்ற செய்யுளின்படி எங்களின் இயற்கையான சுபாவமே அதுவாக இருத்தலால், அதனைப்பற்றிந்து ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்ளும்படி ஏவிவிட்டு கோபத்தையுண்டுபண்ணிக்கொன்று புசிக்கின்றார்கள். இதையறியாப் புல்லறிவுடைய யாங்கள் இக்கபடமான செய்கைக்குட்பட்டு நாங்களே ஒன்றுக்கொன்று குத்திக்கொண்டு சாகின்றோம். இதுவும் ஓர் நன் நடத்தையைச்சேர்ந்ததுதானோ? இதற்குச் சகாயமாய்ச் சிலபுத்திமான்களும் ஒத்திருக்கின்றார்கள். அவர்களில் முன் ஓரிடத்தில் கூறியிருப்பவரில் ஒருவர். அவர் இதற்குத்தகுதியான கத்திசெய்து அக்கத்திபட்டமாத்திரத்தில் தாமதியாமல் மரணமடையத்தக்க ஆலோசனையோடும் பாஷாணங்கலந்த தண்ணீரில் கூசாமல் தோய்த்துக் கொடுத்து, இத்தருமத்தை ஏற்றுக் கொள்ளுகின்றார்.

மற்றொருவர் கத்தி கூர்மை மழுங்கிவிட்டால் சாணைபிடித்துக் கொடுப்பர். வேறொருவர் கதுமை மாறாமல் அடிக்கடிபோர்க்களத்தில் தீட்டிக்கொடுத்துக்கொண்டேயிருப்பவர், இன்னொருவர் பட்சி சாஸ்திரத்தால் எங்களுடைய நிறம் குறியறிந்து கொல்லத்தக்கவல்லவர். இவர்களெல்லோரும் மிகநல்லவர்களே. அற்பமாகிய வெங்களைக்கொல்ல இத்தனை பெயர்கள் கங்கணங்கட்டிக்கொண்டால் இதில்யாங்கள் தப்பிப்பிழைப்பதெப்படி? இப்படி மகா புத்திமான்களாய்ச்சேர்ந்து இப்பெரும் கைங்கர்யத்தைச்செய்துமுடிக்கின்றனர். இதுவுமுங்களுக்கு நியாயந்தானோ?

இன்னுஞ்சிலர் காடை, கவுதாரி, கிளி, நாகணவாய்ப்புள், புறா முதலான பறவைகளையும், சில நாற்கால் ஜீவன்களையும், அவைகளினத்தோடு சேர்ந்து போகபோக்கியங்களையனுபவித்துவாழவொட்டாமல் கூண்டுகளிலடைத்துவைத்து வளர்க்கின்றார்கள். அவர்கள் மனைவி மக்களைவிட்டு சின்னாள் எங்கேயாகிலும் போய்வருவதற்கிடை

யில் பிள்ளைக்கென்னமோ, பெண்சாதிக்கென்னமோவென்று எவ்வளவு கவலைபடைகின்றார்கள் அல்லது ஒரு தினமேனும் பெண் போகமில்லாவிட்டால் எத்தனை குட்டிச்சுவர் ஒண்டியாய்த்தாண்டி ரொண்டியாகின்றார்கள். எங்களுக்கும் இனத்தோடுவாழும் இச்சையும, காமருகார்ச்சியும் இல்லையோ? உங்களுக்கு மாத்திரமோ கடவுளிருக்கின்றார்? என் கொஞ்சமேனும் இரக்கமில்லை?

நாலடியார்.

"இரும்பார்க்குங் காலரா பேதிலார்க் காளாய்
கரும்பார்க் கழனியுட் சேர்வர்—சுரும்பார்க்குங்
காட்டுளாய் வாழுஞ் சிவனுங் குறும்பூழுங்
கூட்டுளாய் கொண்டு வைப்பர்.

என்றபடி இப் டிச்செப்பும் மதியுளார்க்கு மிகுதியும் நரகம் கிடைக்குமெனச்சாஸ்திரம் கூறுகின்றதே. என் அதையறியாமல், அவலமாய்ப்போகின்றீர்கள்?

இன்னும் சிலர் ஓணான், விட்டில், பாப்பாத்திப்பூச்சி, தட்டான் பொன்வண்டு, முதலாகிய சில அற்ப ஜெந்துக்களை, தம் புதல்வர்கள் விளையாடவேண்டுமெனக்கருணையோடும் பிடித்து விளையாடும்படி கொடுக்கின்றார்கள். அக்குழந்தைகள் அறியாப்பருவமாகையால் அதனைக்கயிற்றினாற்கட்டியும, முட்களாற்குத்தியும், அதன் கால்கைகளை ஒடித்தும், வாயினுள் மணலைச்செலுத்தியும், இப்படிப் பலவித ஹிம்சைக்குட்படுத்திய அச்சிறுவர்களும், பெற்றோர்களும் அதைப்பார்த்தானந்திக்கின்றார்கள். இதை யோசிக்கின் பெற்றோர்களின் மதி என்னே? ஒன்றுமறியாச்சிறுவர்கள் அறியாமற்செய்தாலும், அதனைக்கண்டித்து, நன்னடையிற்கொண்டுவர வேண்டியதிருக்க, இவர்கள்தானே பிள்ளைகட்கு இக்கெட்ட பழக்கத்தைக்கற்பித்தால் புதல்வரைப்பற்றிப்பேசவும் வேண்டுமோ?

ஒருவராவது எங்கள் வருத்தத்தை யுணர்கிலீரே. உங்களுக்கு யாங்களென்செய்தோம்? எங்களினும் பெரிய ஜெந்துக்களை எவ்வளவோ சிக்ஷைபண்ணுகின்ற உங்களுக்கு நாங்களென்ன பெரிதா?

இனிமேலாயினும் உங்கள் குழந்தைகட்கு இக்கெட்ட பழக்கத்தைக் கற்றுக்கொடாதீர்கள். குழந்தைகள் செய்யும் பாபபுண்ணியமிரண்டும் பெற்றோர்களைச் சாருமென்பதை நன்றாய்க் கவனித்துக்கொள்ளுங்கள். கெட்ட குணத்தால் நல்ல பெயர் கெட்டுவிடும்.

நம்மனுபவத்தினும், நற்குண நற்செய்கையில்லாதொருவரைப் பற்றிப் பேசுமிடத்து, அவனு! சுத்தக்கழுதை! என்றும், அதே போல் நாயென்றும் குரங்கென்றும் அவர்கள் குணம் செய்கைக் கொத்தவாறு புகலுகிறோம்! அவர் மனுஷ ஜென்மமாவைப்பெற்றும் மேற்கூறிய இழிவுப்பெயரையடைதலால் அதையுற்று நோக்கின் முற்ஜென்மம் அப்பெயருக்கொத்த பிறவியாகவேயிருத்தல் வேண்டும். அஃதொப்ப நல்லாரென்றியம்பப்படுவோர் முற் ஜென்மத்தி லுயர்குலத்திற் பிறந்தனரோ? அல்லது இழிகுலத்திற் பிறந்து அரும்பெரும் புண்ணியங்களைப் புரிந்தனரோ? தெரிகிலோம், இதனை நண்பர்கள் நன்றாலோசிக்கின் இவற்றி னுண்மையுவக்கும்.

> "தீதுநன் றறிகிலாச் சேய ரென்செய்வர்
> கோதற வவரை நன்னெறிற் கூட்டிடா
> தேதங்க ளவர்முன்செய் திழிவை க்கற்பிக்குந்
> தாதை தாய் புதல்வர்க்குச் சத்துருக்களோ."

என்றபடி குழந்தைகளறியாமற் சில கெட்ட பழக்கங்களிற் செல்வது அவர்கட்கு இயற்கையாகிய குணமாதலால், அப்பழக்கத்திற்குச் செல்லாவண்ணம் ஆரம்பத்திலேயே அவர்களைச் சீர்திருத்தி நல்ல பழக்கத்திற் கொண்டுவர வேண்டியது பெற்றோர்களின் கடமை. அப்படிச் செய்யாவிடின் அக்குழந்தைகள் தீய வழியிற் சென்று சீக்கிரம் கெட்டுவிடுவார்கள் என்பது மலைவிளக்காம்.



## மீன்களின் உபன்யாசம்.

---

இச்செகத்தில் அச்சுதனெடுத்த அவதாரங்களில் ஒன்ருன மச்ச நாட்டாராகிய, எங்கள் வரலாற்றை லெச்சையின்றி இச்சையுடன் கேளுங்கள். நசுக்கினுல் மசியக்கூடிய எங்களைச் சரிடண்ண எற்பட்டிருக்குங்கருவியோ, எண்ணியுமுடியாது! இதிலெழுதியுமுடியாது!! ஐயோ பரிதாபம்! பரிதாபம்!! அதில் தூண்டில் என்று சிறு கருவியொன்றுள.

அதன் கொடுமையை என்னவென் றுரைப்போம்!

அநியாயம்! அநியாயம்!! மேற்படி கருவியைப்பற்றி விரித்துரைக்க, அது யாவருக்கும் விளங்கப்பெற்றபதே ஆனுலும் இங்கு கூற ஆவலாய் இருக்கின்றதால் மிகச் சுருக்கமாகக் கூறுவோம்.

ஓர் சிறிய கோலினுதியில், புனைந்திருக்கும் கயிற்றின் கீழ் பாகத்திற் துறட்டிபோன்ற ஓர் முள்ளும், அதனருகில் பழுவான ஈய மணியொன்றும், அக்கயிற்றின் மத்தியில் கெட்டியாலாகிய மிதப்பான்றும், சேர்க்கப்பட்டிருக்கும். அம்முள்ளில் நாங்கள் தின்னும் வஸ்துக்களை யூட்டி, தண்ணீரிற்போட்ட உடன், பழுவான மணி கீழ் பாகத்திலிருப்பதால், மேற்படி கெட்டியினுற் கட்டப்பட்ட மிதப்புவரை அது தண்ணீர்க்குள் அமிழ்த்த அதைக்கண்ட யாங்கள், மதியின்றி ஏதோ பிரை யகப்பட்டது எனக்கருதி வாயினுல் ஆவலோடு கவ்விய உடன், இவ்விதம் செய்துவைத்துக் கரையில் தயாராயிருக்கும் தயாபரமூர்த்தி, யாங்கள் அகப்பட்டுக்கொண்டதை மிதப்பின் அசைவினுல் அறிந்து, குதிரையைச் சவுக்கால் அடிப்பதேபோல் ஓர் சுண்டுச்சுண்டிச் சுழற்றி வீசுவார்.

ஹா! ஹா!! அப்பொழுது யாங்கள் ஆகாயத்தை எட்டிப் பிடிப்பதேபோல் சுற்றிவந்து, ஊர்த்துவமுகத்தோடு கூத்தாடும்போது, கண்களிருண்டு, கருத்தழிந்து, உடல்பதறி, உயிர் இன்ன நிலையிலிருக்கிறதென்று தோன்ருது. அதில் ஊசலாடும் எங்கள் வாயினுள் சிக்கிக்கொண்டிருக்கும், ஷை துறட்டி முள்ளை மிக ஆனந்தத்துடன்

கழற்ற எத்தனித்து, கொஞ்சமேனும் இரக்கமின்றி, வெகு சுலபமாகச் சில் வாயைக்கிழித்து, ஷெ முள்ளினின்றும் விடுவித்து, அருகிலிருக்கும் பாவப்பையோ, அல்லது எதனாலேனும் பின்னிய பெட்டியோ, இதிலொன்றிற் சேர்ப்பார்கள்.

இப்படிக் கிஞ்சிற்றும் இரக்கமில்லாத கொடிய பாதகர்களைக் கடவுள் சிருஷ்டித்ததின் காரணம் தெரிகிலோம். ஹே! உணர்விலீர்!! உங்களையும் யமபடர்கள் தூக்கிற்போட்டுத் தொங்கவிட்டு, எங்களை புண்ணும் வாயினுள், இருப்புச்சலாகையைப் பழுக்கக்காய்ச்சி கவ்வச் செய்வார்களென்பதைச் செவ்வையாய் அறியீரோ? மென் மேலும் இப்பாவச் செய்கைக்கு ஆவலுடையாதீர்கள்.

> "இருப்பதுபொய் போவதுமெய் என்றெண்ணி நெஞ்சே
> யொருத்தருக்குந் தீங்கினையுன்னாதே—பருத்ததொந்தி
> நம்மதென்று நாமிருக்க நாய்நரிகள் பேய்கழுகு
> தம்மதென்று தாமிருக்குந் தான்

என்று திருவெண்காடர் அருளியதைத் தெளிவாய்க் கெவனியுங்கள். ஓர் அற்பமாகிய கருவியின் செயல் இவ்வளவு கொடியதானால் மற்ற கருவிகளைப்பற்றி மதிக்கவும் வேண்டுமோ?

இது நிற்க எங்களை ஓர் காலத்தில் ஏராளமாய்ப்பிடித்து உண்டுமுடியாமலோ, அல்லது இலாபத்தைக்கருதியோ, எங்கள் உடலை இரண்டு கூறாக வகிர்ந்து, அதனுள் உப்பைச்செலுத்தி உலர்த்தியபிறகு, அதற்குவேறு பெயரிட்டுச்சிலவிவேகிகள் விலைக்கு விற்கக் கொண்டுவருகின்றார்கள். அவ்விதம் கொண்டுவரும் வஸ்துவை யுண்ண விருப்பமுடையவர்கள், மிக்க நாகரீகமுடையவர்கள்போல் நடித்து, அதை வாங்க எண்ணி, மேற்படி வஸ்துவைக் கையாலெடுத்து, அதன் பிளவை நீக்கிப்பார்க்கும்பொழுது, அதனுள்ளிருந்து பொலபொலவென்றுதிரும் புழுக்களைத் தட்டிவிட்டு, வெகு காலம் தூரதேசம் சென்றிருந்து வந்த தம்புதல்வர்களைக் கண்டாலெவ்வளவு அன்பு ஏற்படுமோ, அதேபோல் ஆசையென்னும் அறியாமையால், அவ்வஸ்துவை முகத்தோடுமுகம் சேர்த்து, மூக்கோடுமூக்கொட்டி, சுவாஸத்தை மேலும் கீழுமாக இழுத்து, அதன்

வாசனையை நேசமுடன் விட்டுவிட்டு, அடிக்கடி முகர்ந்து தொட்டுப் பார்த்து, தங்கள் விருப்பத்திற்கு நட்டி வராமற், கெட்டியாய்வாங்கி, முன் தட்டிவிட்டதிலுதிர்ந்ததுபோகத் துஞ்சிக்கிடக்கும் எஞ்சிய கிருமிகளுடன், கொஞ்சமும் லெச்சையின்றி, இச்சையுடன் புசிக்கின்றார்கள்.

மேற்கூறிய விடயங்களை நேரிற் பார்த்தும், மனதொப்பிச் சாப்பிடும் அருகரீசமுற்றவர்களை யுற்று நோக்கின், அற்புதத்திலுமற்புதம், மகா அற்புதமாய்ப் பேசக்கூடியதாயிருக்கின்றது.

பாபத்திற்கிடமாகியதும், அருகரீசமுள்ளதுமான, கெட்ட விடயத்தைச் செய்யாதுவிட்டு, நன்மை கடைப்பிடித் தொழுகுவீர்களாயின், ஈசனருளைப்பெறப் பூசித்திருக்கும் அன்பரின் நேசத்திற்கு விஸ்வாஸமாய், நீண்டகாலம் வாழ்வீர்களென்பது திண்ணம்.



## எருதுகளின் உபன்யாசம்.

திடமுடன் சுடலையில் நடமிடும் ஈசன் ஊர்தி என்ற இடப நாட்டாராகிய எங்களின் துயரை கபடமிலாது செப்புகின்றோம். அதனை விகடம் செய்யாது கேளுங்கள். ஜீவகாருண்யமென்றுற் கொன்றருந்தாதுமாத்திரமன்று; எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும்: என்று முன்னரே கூறி இருக்கின்றது. இன்னும்:

(1) ஈசனெனக்கருதி எல்லாவுயிர்களையும்
நேசத்தால் நீ நினைந்துகொள்,

(2) ஓவாததொன்றே பலவா முயிர்க்கெல்லாந்
தேவான தென்றே தெளி.

என்று உங்கள் பாட்டியாராகிய ஔவை செய்த குறளினும் காணலாகும். ஆதலால், எந்தப் பிராணிகட்கும எந்தக் காலத்திலும் எவ்வகையான ஹிம்சையும் செய்யாதிருந்தலேயாகும். இவைகிடக்க,

இக்காலத்துள் ஓர் நற்குலத்துதித்த, சிலவாலிபர்களும் இன்னுஞ்சிலரும், செல்வமிகுதியால் எங்கட்கு, மதிப்புக்கு மிஞ்சியபொருளைக்கொஞ்சமும் மனதஞ்சாமற் கொட்டியிட்டு, நெற்றிச்சுட்டி, அலமுருகு, பலவர்ணக்குஞ்சம், முதலானதை அலங்காரமாய் அமைத்து, நேராய் ஓடத்தேர்வடம்போன்ற மூக்குக்கயிர்கள் போட்டுக்காவடி வண்டிகள் என்று சொல்லக்கூடிய சிறிய வண்டிகள் செய்து, அதிலெங்களைப்பூட்டி ஓட்டுவதற்கு, ஓரங்குல நீளத்தில் இருப்பூசியை அதற்கேற்றவாறு அழகான வெள்ளியினாற் பூண்கட்டிய தடிகளின் நுதியில் வைத்தழுத்தி, பந்தயத்திற்காகவும், கெம்பீரத்திற்காகவும், யாங்களவர்கள் நோக்கம்போல் ஓட்டமபிடிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் எங்களின் வருந்துதலைக் கிஞ்சிற்றும் ஓராது, மேற்படி "தாற்" என்னும் ஆயுதந்தாற், பல்லை நறநறவென்றுகடித்து வெகு கோபாவேசத்துடன் உரோசம்பாராட்டி, அவர்கள் பலத்தையெலாம் தாருகிய ஆயுதத்திற்சேர்த்து, ஒக்கித்தாங்கிக் குத்துகின்றார்கள். அக்குத்தினால் ஏற்படும்உபாதையைச்சகிக்கமாட்டாமல், கால்களோ

டிந்தாலும், வயிறுகிழிந்து குடல்வெளியானுலும், அதையெல்லாம் எண்ணிப்பார்க்க இடமொன்றின்றி, மேடு பள்ளமென்பது தோன்ருமல், கண்ணுவிண்ணும் தெரியாது, ஓடவேண்டியதிருக்கின்றது. உயிர் துறந்தாலொழிய ஓட்டம் நிற்கமாட்டோம். இப்படியோடுவதும் போதாதென்று நினைத்து, சிலர் எங்களை விழுந்து கடிக்கின்ருர்கள். இவ்விதம்செய்வது அவர்களின் விளையாட்டுப் புத்தியினுலன்ரே? இதனை வீட்டிலுள்ள பெரியோர்கள் கண்டித்து விலக்காதிருதிருப்பதும் எங்களின் கஷ்டகாலமே!

இன்னும் சிலர் மஞ்சிவிரட்டென்னும் வினையை விளையாட்டாக நினைத்து, அதற்காக எங்களுக்குச்சூலம்சாத்தி ஞாலத்தில் விட்டு, எங்களிஷ்டம்போல் பயிர்களின் நஷ்டமறியாமல் தின்றுகொழுத்து, நின்று உலவும்போது, வெள்ளாண்மைக்காரரெல்லாம் கொள்ளையாய்ப்போயினதே, என்று வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொண்டழுவதை அந்த ஈசன்தான் அறியவேண்டும். இன்னும் எங்கள் உற்சவமாகிய மஞ்சிவிரட்டு வந்துவிட்டாலோ, எருதுகளுக்கு விருதுகள் கூறி, வஸ்திரம், மணி, அரைஞாண், புட்பமாலை, முதலான ஆபரணங்களை அலங்காரமாய்க்கழுத்திலிட்டு, வெகு ஆரவாரத்துடன் கொட்டிமுழக்கி விரட்டுவாகள். அவ்வேடிக்கையைப்பார்க்க உல்லாசமாய் வந்திருக்கும் சல்லாபக்காரர்களும், விரட்டிப்பிடித்து வெற்றிகொள்ள வந்திருக்கும் முரட்டுத்தனமுள்ளவர்களும், ஆயிரக்கணக்கான கூட்டங்களாகக்கூடுவார்கள். அவ்வளவு கூட்டத்திலெங்களை, ஹா! ஹா! ஓ! ஹோ! என்று வாய்ச்சொல்லாலே பாய்ச்சல்காட்டி மிரட்டி விரட்டுவதால், ஜனச்சேர்க்கையினுலும், கொட்டுமுழக்கினதிர்ச்சியினுலும், பயமேற்பட்டு வெருண்டு, ஆகாசம் பூமி என்பது தோன்ருமல், எள்ளிட இடமின்றி எங்கும் நிறைந்திருக்கும், ஜனங்களைத் தப்பிப்போக வழியில்லாது, யானைக்கூட்டத்திற்சிம்மம் பாய்ந்தாற்போல் ஜனங்களின் நடுவேநுழைந்தோடும்போது, எங்களைப்பிடிக்கவென்று வெகு வீராவேசத்துடன் வந்திருக்கும் வல்லமையுள்ள மல்லர்களின் உபத்திரவத்தால் உயிரைவெறுத்து, எதிரிலிருப்பவர்கள் யாராயிருந்தாலும் இதற்காகவென்று வெகுகூர்மையாகச்செய்து தைல

மிட்டு அம்புபோல் வைத்திருக்குமெங்கள் கொம்புகளால் அவர்கள் வயிற்றைக் குத்திக்கிழித்துக்குடலைப்பிடுங்கி, நரஸிம்ஹமூர்த்திபோல் மாலையாய்ப்போட்டுக்கொண்டோடுவது, எங்கள் வழக்கம். அன்றி எங்களுக்கே ஏதேனும் அபாயம் நேரிடுவதுமுண்டு. இதென்ன அறிவுமிகுந்த விளையாட்டு. இதற்குச்செலவோ, ஆயிரக்கணக்கு; வஸ்திரமோ அளவில்லை; இதினாலேற்படுந்துன்பமோ, சொல்லிமுடியாதது; இதுவென்ன காலம்; செய்வதெல்லாம் கோலம்; அதினால் வருமோலமென்றுணராது செய்யும் தனவான்களே, இதில் வந்த புண்ணியமென்னே? இது பாபச்செய்கை என்பது, படிகம்போல் தெரிதற்கில்லையோ?

இதிற்செலவிடும் பொருளும், வஸ்திரமும், யாதொரு பலனின்றி நாட்டாருக்கும், வீட்டாருக்கும், மாட்டாருக்குமாய்ப்போகின்றதே. அவர்களாயினும் பயனடைகின்றார்களா? பயனற்ற பழியைச்சுமத்தும் பாவத்திற்குக்காரணமாகிய இதனைச்செய்வதினும், "பிராணன் போனாலும் மானத்தை விடாதே" என்று உலகோருரைக்கின்றார்கள். அதாவது நீங்கள் காப்பாற்றவேண்டுவது, ஈதிரண்டுமேயல்லால் வேறல்ல.

ஆனால் பிராணன்போனாலும் மானத்தை விடாதே என்றால், பிராணன் போனபிறகு மானத்தை விடாமலிருப்பது, அல்லது காப்பாற்றுவது, எது? பிராணன் போய்விட்டால் மானம் விமானம்தான். கருத்து அதன்று. மானத்திற்குப்பிராணனேமுதன்மை. பிராணனுக்கு மானமே முதன்மை. இப்படி இரண்டும், ஒன்றுக்கொன்று வித்தியாசமின்றிச்சமமேயாயினும், பிராணனுக்குக்கீர்த்தியையுண்டு பண்ணுவது மானம். மானமிழந்தவன் மற்றெல்லாம்இழப்பன், மானத்தை விட்டாலோ அவர்கட்கு பிராணனிருந்தும் உயிர்ப்பின்மையற்ற உடம்பேயாம்.

ஆகலால் மானத்தையே முதன்மையாக உயர்வுப்படுத்திக்கூறுவது உலகவியற்கை. மானமென்பது ஒருவருக்கு இருக்குமாயின் அவர் ஒருபோதும் தீயவழியிற்செல்லார், மானமென்பது நன்மார்க்கத்தையே என்றுமநுசரித்துநிற்கும். இப்படி ஒன்றுக்கொன்று உயர்

வின்றியிருக்கும் பிராணனைக்காப்பாற்ற ஆகாரமும் மானத்தைக்காப்பாற்ற வஸ்திரமும் இவ்விரண்டுமே உங்களுக்கு அவசியம் இருக்கவேண்டுவது. ஈதிரண்டையும காப்பாற்றிக்கொள்ளச்சக்தியற்ற பரம ஏழைகள் உலகத்தில் அனேகர் நிறைந்திருக்கின்றார்கள். அவ்வித ஏழைகட்கு வேண்டுவதெதுவோ அதுவே இம்மஞ்சிவிரட்டில் செலவாகும் அன்னமும், வஸ்திரமும். இவ்விரண்டையும் ஏழைகட்களித்து இகத்திற்கீர்த்தியையும பரத்திற்குறுதியையும் தேடாது வீண்டாம்பீகத்திற்காக இப்பெருஞ்செலவிட்டு மாளாவினைக்கு ஆளாகின்றீர்கள். இன்னும் இக்காலத்துள்ள சில பிரபுக்கள் 'உரைப்பார் உரைத்தவை இரப்பார்க்கேற்ற தொன்றீயார்'.

ஆதலால், ஏ, பகுத்தறிவுள்ள கனவான்களே! இனியாகினும் இவ்வித கெட்ட பழக்கத்தை விட்டு நற்செய்கையான தானதர்மங்களைச் செய்து மோக்ஷ சாதனத்தை அடைவீர்களெனப் பன்முறை கேட்டுகொள்கின்றோம். இவ்வேடிக்கையைப் பார்க்கப்புகும் அறிவாளிகளே இதில் ஏர்ப்படும் இன்பம் என்னபிரயோஜனம். நன்றாய் கெவனியுங்கள். இம்மஞ்சி விரட்டாகிய விளையாட்டு, தென்னாடுகளிலேதான் மிகுதியும் நடைபெற்று வருகின்றது. பிராணனைப் பார்க்கினும், மானமே பெரிதெனக்கூறியதற் குதாரணம்.

ஊனமே ஆன ஊணிடை யிருக்கும்
உயிரினைத் துறந்தும் ஒன் பூண
மானமே புரப்பது அவனிமே லெவர்க்கும்
வரிசையுந் தோற்றமும் மரபும்

என மானமும் அதில் அபிமானமும் இல்லாதவர் உலகினில் இருந்தென்ன இறந்தென்ன. இவை இரண்டினையும் காப்பாற்றிக் கொள்பவரும் காப்பாற்றிக்கொள்ள இயல் பற்றவர்களுக்கு வேண்டுமுதவிபுரிபவரும் பேருலகினும் அதற்கு நேருலகினும் என்றுமழியாக் கீர்த்தியுடன் வாழ்வாரென்பதி லையமின்றாம்.

இது நிற்க, எங்களிற்பெண்பாலாயுள்ள காமதேனுகாச்சியாரென்ற பசுக்களில் நந்தை, சுபத்திரை, சுரபி, சுசிலை, சுமனை என்று ஐந்து வகையுள. அவைகளின் நிறம், குறி, குணமுதலாய விடயங்

களை விரிக்கிற்பெருகும். ஆதலாலிங்கு சில முக்கிய விடயங்களை மட்டுமே எடுத்துரைப்போம்.

கவி.

அரனாதி யொருமூவ ரமரேச மருமானு
மொருவாம லுரைவார்க ளுமைபாதி மடவாரு
மரிதாய மறையோர்க ளுடலாவி னுடலார்வ
மொருவாது வழிபாடு புரிவார்க ளுயர்வாரே

என்றபடி அப்பசுக்களினிடத்தில் அரன், அரி, அயன் ஆகிய மூத்தேவரும் இந்திரனும் அவன் வழித்தோன்றும் மற்றைத்தேவரும், உமா தேவி முதலான பெண்களும், அந்தணர்களும், இன்னுங் கங்கை முதலான நதிகளும் அப்பசுவினுடலில் வாசஞ்செய்கின்றதனால் அன்போடு போஷித்து பூசை புரிந்து வருபவர்கள் இகத்தும் பரத்தும் நல்ல போக போக்கியங்களை அனுபவிப்பரென்றும் இன்னுமனேக விசேடங்களைப்பற்றியும் சிவதருமோத்திரம் கோபுரவியலிற் கூறு நிற்கின்றது.

இன்னும் அதிலுண்டாகும் பால், தயிர், நெய், கோசலம், கோமயம், கோரோசனை ஆகிய ஆறும் அபிஷேக அவுடத யாகாதிகட்கும் அகம் சுத்தி ஆத்ம சுத்திகட்கும் துர்க்கந்தங்களையும் அநேக பாவங்களையும் போக்குதற்கும் இன்றியமையாப் பொருளாயுளது இவற்றை சிவபெருமான் ஆன்மாக்களுய்யும் பொருட்டு ஆதி காலத்திற் பாற்கடலின் வழியாய்த்தோன்றிய பின்னர் பூமியிலவதரிக்கும்படி செய்தனர்.

இவ்வளவு உயர்வுடைய பசுக்களை கிரகங்களில் வைத்து அதற்கு ஒவ்வொரு தினமும் நீராட்டி, மஞ்சள் குங்குமம் புஷ்பம் முதலியன சாத்தி, தூபதீபம் காண்பித்து, அருகம்புல் முதலிய தின்பண்டங்களை யூட்டி பய பக்தி விஸ்வாசத்துடன் சுத்திவந்து நமஸ்கரித்து, உபசரித்து அன்போடு வளர்ப்பவர்கள் என்றென்றைக்கும் அழியாத செல்வத்துடன், ஆனந்தமாய் வாழ்வார்கள். இன்னும் ஓர் பசுவானது சூல் நிறைந்து கன்றுபோடும் சமயம் காத்

திருந்து சிரசூதயமாகும் பொழுதில், அப்பசுவை மூன்று தரம் சுற்றிவந்து நமஸ்கரித்தால், சகல பாவங்களையும், அடியோடு போக்கிவிடும். என்று சாஸ்திரம் நேத்திரம்போற் தோற்று நிற்கின்றது.

அப்படி இருக்க இக்காலத்துள்ளவர்கள் அதனை மற்ற அற்ப ஜீவன்களைப்போல் நினைத்து கோல்களினாலும், கரங்களினாலும், அடித்தும், சொல்லக்கூடாத துர்வார்த்தைகளைச் சொல்வதுடனும், அண்ணாந்தாள், கிட்டி, முதலானவைகளைப்போட்டு நினைத்தபடி ஹிம்சைக்குட் படுத்துகின்றார்கள்.

நிற்க, சிலர், அதனிடத்துள்ள பிரதிபிரயோஜனத்தை மட்டும் கருதி, பாலுள்ள வரையில், நல்ல உணவுகளை உபசாரமாய், அருகே இருந்து, அன்போடு கொடுப்பவர்போல் ஊட்டி அதனிடத்துள்ள பாலை, கன்றுக்குட்டி நின்று பரிதவித்து திண்டாடும்படி செய்து ஒட்டக்கறந்து விட்டுவிடுகின்றார்கள். பால் சுவரி விட்டாலோ புல்லுக்கட்டிற்கும் மல்லுக்கட்டாய் விடுகின்றது.

உள்ளத்திற் பொருந்திய ஆசையால் வேண்டிய அளவு கன்றை பாலருந்தவொட்டாமல் விலக்கிக் கறந்துகொள்ளும் பாதகர்களை, எமபுரத்திற் காடாக்கினிபோல், வளர்த்து வைத்திருக்கும் தீக்குழியிற்றள்ளி, அனேகந் தொந்திரவு செய்வதுடன் இரௌரவாதி நரகிலும் சேர்ப்பார்கள் என்று கூறியுள.

கவி.

உற்ற வாசையாற் கன்றுக் கொறுப்புறப்
பற்றி யான்முலை பால்கொளும் பாதகர்
முற்றித் தீயுதாத் தினு மூளவே
பற்று மீன்று நரகிற் படிவரே.

என்பதனாலறிக.

ஈதிம்மட்டோடிருக்க இன்னும் தற்காலத்துள்ள குடியானவர்கள், யாங்கள் உழைப்பது போதாதென்று எங்கள் பத்தினிமார்களாகிய பசுக்களையும் ஏரிற்பூட்டி உழுகின்றார்கள். "பெண்ணென்றாற்

பேயுமிரங்கு" மென்ற பழமொழியும் பழுதாயிற்று. அத்னூற்றுன் கிரமமாகப் பெய்யவேண்டிய மாரிகாலத்தில் மழை பெய்யாமற் காலமாரி பெய்வதால் அச்சொல்லும் மாலை மாற்றுச்சொல்லாய் வழங்குவதும் தவிர, விளைவுகுன்றி அக விலையும் குறைந்து ஆகாரத்திற்குத் தாராளமாய்க் கிடைக்காமற் போராடுகின்றார்கள்.

"பண்ணிய பயிரிற் புண்ணியம் தெரியும்"

இக்கொடிய செய்கையைச் செய்யும் குடித்தனகாரரை கிராமதாரிகள் அல்லது கிராம அதிகாரிகள் கண்டித்து விலக்காத குற்றத்தினால் சரியான விளைவின்றி நஷ்டமடைந்து கஷ்டப்பட்டு கடனுக்காளாய் என்செய்வோமென்றேங்கித் தவித்து, இருணத்தைத் தீர்க்கத் தருணம்பார்த்து பூஸ்திதியைப்போக்கிப் புலம்பித்தவிக்கின்றார்கள்.

ஐயோ! இக்கொடுமை எக்காலம் தொடங்கிற்றோ அக்கால முதற்கொண்டு பஞ்சம் வந்து நெஞ்சைப் பிளக்கின்றது.

குறள்.

"தானம் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்:

என்னும் திருவள்ளுவ நாயனாரின் திருவாக்குப் பொய்யாமோ வேண்டியபோது வானம் மழை வருஷியாமல் காலந்தவரிப் பெய்வதால் உலகத்திலுள்ள யாவரும் இக்கோலத்திற் காளாகின்றீர்கள்.

"குடிகள் செய்வது கோனுக்கென்றும்" பாரி செய்வது பர்த்தாவிற்கென்றும், பிள்ளைகள் செய்வது பெற்றோர்கட்கென்றும், ஏவலாளர் செய்வது எஜமானுக்கென்றும், அவரவர்கள் செய்யும் பாவபுண்ணியம் நன்மை, தீமை, புகழ்சி, யிகழ்சியாவும் எவரெவர்க்குக்கர்த்தாயாவரோ அவர்களைச் சாருமென்று சாத்திரங்கள் ஆத்திரப்படுகின்றன. ஆதலால் கிராம அதிகாரிகளும் மற்றவர்களும் இனிமேலாயினும் இக்கெட்ட செய்கையை விலக்கத்திட்டமாயிருந்து மட்டுப்படுத்துங்கள். உங்களுக்கு நஷ்டம் வாராது. இதில், அஜாக்ரதையில்லா

மற் சாக்ரதையாகவிருந்து விலக்குவீர்களாயின், அன்பரின் இருத யாசனத்திலிருக்கும் எம்பெருமான், என்றென்றும் அச்சமின்றி இரக்ஷிப்பாரென்பதை நிச்சயமாய்ச் சொல்வோம்.

இன்னும் காட்டில் வாழும் மிருகக்கூட்டத்தார் முதலிய பாவை களின் குறைகளையும் முறையிடுகின்றோம். இக்காலத்துள்ள செல்வ மிக்காரும், அவர்களைச் சார்ந்தவர்களும், தங்கள் சுவாதீனத்திற்குட் பட்ட பெரும் காடுகளை, அக்காடுகள் அழியாதிருக்க மிஞ்சிய பொருட் செலவுடன் அனேகம் காவலாளர்களை நியமித்து செழிப் புடன் அடர்த்தியாக வளர்த்து, அவர்கட்கு உற்சாகம் வந்தபோதெல் லாம் ஆயிரக்கணக்காக தம் நாட்டு ஜனங்களை வேட்டைக்கு வரும் படி ஆக்ஞாபித்து, வாளாயுதம், வேலாயுதம், கோலாயுதம், சூலாயு தம் ஆக நாலாயுதமும். சமுதாடு, மண்டா, வளைதடி, துவக்கு வரிசையாக பூண் கட்டிய தடிகள், பல இறகுகளால் தொடுக்கப் பட்ட தோரணக் கருவிகள், வலைகள், முதலானவைகளுடனும், இதற்காகவென்றே நூற்றுக்கணக்காய் இட்டு வாங்கிய பலஜாதி நாய்களுடனும், யாங்கள் வாழும் மேற்கூறிய வனத்தினுட்புகுந்து ஜனசமுகத்தாலும், ஆயுதங்களாலும், எங்களினம் யாவையும் அல் லோல கல்லோலப்படுத்திக் கொல்லுகின்றார்கள். அவர்கள் உற்சா கத்தினுற் காரணமின்றி சிக்ஷிப்பதும் இரக்ஷிக்கும் அவர்கட்குற் றதுதானே?

ஆனலிவ்விடத்திலொரு கேள்வியுண்டாகலாம். முற்காலத்தி லுள்ள மனுமாந்தாதி முதலியவரசர்கள், வேட்டையாடி யனேகம் மிருகங்களை வதைக்கவில்லையோ எனின்! அவர்கள் அரசாட்சிக்குட் பட்ட நாடுகளிலுள்ள குடியானவர்கள் வெள்ளாண்மை செய்திருக் கும் பயிர்களை எங்கள் வகையறுக்கள் அழித்து நாசஞ்செய்வதைக் கண்ணுற்று, அவைகளைத் தாங்களே தடுத்துக்கொள்ளச் சக்தியற் றவர்களாய் தங்களை இரக்ஷிக்குமரசனிடம் வந்து முறையிட "துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம்" இராஜ நீதிக்குற்றதாகையால் அவ்வித ஹிம்சையை நிவர்த்திசெய்து தம் குடிகளைக் கார்க்கும் பொருட்டு நாட்டிலுள்ள யாவரையும் ஆயுதபாணிகளாய் ஒருங்கே

வேட்டைக்குப் பிரயாணம் செய்யும்படி பறையறைவித்துத் தாமும் வேட்டை சன்னதராய் அனேக வாத்தியகோஷங்களுடன் புறப்பட்டு யாங்கள் வாழும் வனத்துட்புகுந்து, ஜனப்பெருக்கத்தின் பேரோசையினாலும், பலவாத்தியங்களின் முழக்கத்தினாலும், காட்டைக்கலைத்து பயங்காட்டி வெகு தூரம் செல்லும்படி தந்திரமாயோட்டிவிடுவதேயல்லாது, கொல்லவேண்டுமெனும் கெட்ட அபிப்பிராயத்துடன் யாதொரு ஹிம்சையும் செய்வதே கிடையாது.

இவ்விதம் செய்வதால் யாங்கள் மிரண்டு ஓட்டம்பிடிக்கும்போது எதிர்ப்பட்டவர்களைக்கண்டு நம்மைக்கொல்லவல்லவாவருகின்றார்களெனப்பீதி ஏற்பட்டு (அவர்களைக்கொன்றுவிட்டு உயிர்தப்பித்து ஓடிவிடவேண்டுமென்ற கருத்துடன்) கொல்ல அரபாரம்பண்ணுவதையறிந்த அவர்கள் "தன்னைக்கொல்லவந்த பசுவைக்கொல்" என்னும் மத்திபநீதிமுறையையனுசரித்து எங்களை ஒருவேளை கொல்லுவார்களேயல்லது காரணமின்றி உற்சாகத்திற்காக ஒருக்காலும் ஹிம்சிக்கார்கள்.

மேற்கூறியபடி தற்காலஇந்து சைவசமயத்தவர்கள், சமயக்கோட்பாட்டை இவ்விடயத்திற் கொஞ்சமேனும் கருதாது, உற்சாகத்திற்காகவோ வேறெவ்விதகாரணத்தாலோ அடிக்கடி வேட்டையாடுமுறையை யனுசரித்துவருகின்றார்கள். "அதனாலரசனெவ்வழியோ குடிகளவ்வழி" எனும்பழமொழிக்கிணங்க அவர்கள் நாட்டிலுள்ள அனேகர், வெகு கூட்டத்துடன் நினைத்தபோதெல்லாம் வேட்டையாடுமீட்டிமுதலிய ஆயுதங்களுடன் காட்டிற்புகுந்து, எங்களை அனேகவிதஹிம்சைகள் செய்து, ஒவ்வொரு காலங்களினும் கணக்கில்லாமல் அவர்களினிச்சை எப்படியோ அப்படியே நிறைவேறும் வரை காட்டைக்கலைத்து அனேக ஜீவன்களைக்கொன்று கொண்டு நாட்டிற்புகுவார்கள். அவ்விதம் செய்வது உங்கள் 'சைவசமயக்கொள்கைக்கும் சமயநீதிக்கும் ஏற்றதுதானா!' இதனை தற்காலத்தவர்கள் கொஞ்சமேனும் யோசியாதிருப்பது எங்களின் கஷ்டகாலமன்றோ! இனிமேலாயினுமிவ்விதச்செய்கைகளைச்செய்யாதிருக்கக்கட்டளை இடுவரேல் எங்கள் துயர் சற்று நிவர்த்தியாகும். அவர்களின் ஜீவகாருண்யம் எத்தன்மைத்தோவறியோம்.

கொலைமறுத்தலைப்பற்றிச்சாஸ்திரங்கள் கொள்ளை கொள்ளையா
ய்க்கூறுகின்றனவே அதைநீங்களேன் அறியவில்லை. அதிற்சிலவற்றை
இங்கெடுத்துரைப்போம்!

1. "கொல்லா விரதம் குவலய மெல்லா மோங்க
எல்லார்க்கும் சொல்லுவ தென்னிச்சை பராபரமே,"

2. "கொல்லா விரதம் கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே,"

3. "கொலைகளவு கட்காமம் கோபம்விட்டா லன்றே
மலையிலக்காய் நின்னருள்தான் வாய்க்கும் பராபரமே,"

எனத் தாயுமானசுவாமிகள்கூறிய திருவாக்காலும்.

1. "கொன்றே னனேக முயிரையெல்லாம் பின்புகொன்று
[கொன்று
தின்றே னதன்றியுந் தீங்குசெய்தே னதுதீர்க்கவென்றே
நின்றே னின்சன்னிதிக்கே யதனாற்குற்றம் நீபொருப்
என்றே யுனைநம்பினே னிறைவாகச்சி யேகம்பனே[பாய்

2. "கொல்லாமற் கொன்றதைத் தின்னாமற்குத்திரங்
[கோள்களவு
கல்லாமற் கைதவரோடிணங்காமற் கனவிலும்பொய்
சொல்லாமற் சொற்களைக்கேளாமற் றோகையர் மாயையிலே
செல்லாமற் செல்வத்தருவாய் சிதம்பர தேசிகனே' [லே

எனப்பட்டினத்தடிகள் பாவாலும்,

"கொன்றா னுகருங் கொடுமையை யுண்ணினைந்
தன்றே யொழிய விடுவானேல்—என்றும்
இடுக்க ணெனவுண்டோ இல்வாழ்க்கைக்குள்ளே
படுத்தானுந் தன்னைத் தவும்."

என்று அறநெறிச்சாரத்தினும்.

"கொலைபுரியான் கொல்லான் புலான்மயங்கான் கூர்த்த
அலைபுரியான் வஞ்சியான் யாதும் — நிலைதிரியான்
மண்ணவர்க்கு மன்றி மதிமலி பூங்கோதாய்
விண்ணவர்க்கு மேலாய் விடும்."

என்று ஏலாதியினும்.

'கொலையினைவிலக்கினார்க் கூற்றமும்விலக்கும்'
என்று மெய்யறத்தினும்,

"கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமு மோம்பார்
களவன்றோ வேனையவும் செய்வார் — பழியோடு
பாவமிஃதென்னார் பிறிது மற்றென் செய்யார்
காமம் கதுவப் பட்டார்,"
என நீதிநெறி விளக்கத்தினும்,

"யானை யுடைய படைகாண்டன் மிகவினிதே
யூனைத் தின்றூனைப் பெருக்காமை முன்னினிதே"
என இனியவை நாற்பதினும்.

"மருவாணைப் பெண்ணாக்கி யொருகணத்தில் கண்விழித்து
[வயங்குமப்பெண்
ணுருவாணை யுருவாக்கி பிறந்தவரை எழுப்புகின்ற
[வுருவனேனும்
கருவாணை யுறவிரங்கா துயிருடம்பை க்கடிந்துண்ணுங்
[கருத்தனேலெங்
குருவாணை யெமதுசிவக் கொழுந்தாணை ஞானியெனக்
[கூறொணாதே,"

எனத் திருவருட் பாவினும்.

"இந்நோய் நமக்குண்டென் றெண்ணாதே எவ்வுயிரு
முன்னேவக் கொன்றுண்ணு மூர்க்கத்தா — மெந்நோவும்
பண்ணப்படு நரகிற் பாவிகளிற் பாவிகளென்
றெண்ணப் படுவா ரிசைந்து,"
என இதிகாசத்தினும்,

"கொலையாதி நெறியகன்ற ஞானந்தானே கூறரிய
[மேலானஞானமாகும்
கொலையாதி யகன்றெழுகுந் தவங்கடாமே குற்றமில்லா
[நற்றவமென்றுரைக்கு நூலும்
கொலையாதியகற்றிய நல்லறங்கடாமே குவலயத்திலொப்
[பறிய வளங்களாகும்
கொலையாதியகன்ற பெருஞ்செல்வந்தானே கூறிலுயிர்க்
[கிதமான வாழ்வுதாமே,"

எனச் சிவஞான தீபத்திலும்,

"அக்கே போலங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோ யெழுபவே—யக்கா
லலவனைக் காதலித்துக் கான்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்,"

என நாலடியாரிலும்,

1. "கருவினு ளழிவன்முற்றிக் கழித்துடனழிவன் காளைப்
பருவமுற்றழிவ னீகைபகர்ந்துபின் னுதவாப்பாவி
பெருவலை கண்ணியாலும் பிடித்துயிர் வதைத்தபேதை
கருதியபொருளைத் தக்கோர்க் குதவிடான்
[றிளைத்தையன்,"

2. "அவயவமனைத்துங் குன்றியழிந்திடு மாக்கையாலூன்
சுவையினை விரும்பியுண்ட துட்டர்கள் சோலைதன்னைத்
திவலையத்திரை நீர்தேங்குந் திண்ணிய தீரந்தன்னை
யவமதியாலே சாலவழித்திடு மற்பர்தாமும்,"

எனச் சிவதருமோத்தரத்திலும்.

"கொல்லாமை எத்தனை குணக்கேட்டை நீக்குமக்
குணமொன்று மொன்றிலேன் பால்
கோரமெத்தனை பக்ஷபாத மெத்தனை வன்
குணங்களெத்தனை கொடிய பாழ்

கல்லாமை யெத்தனை யகந்தை யெத்தனை மனக்
கள்ள மெத்தனை யுள்ளசற்
காரியஞ் சொல்லிடினு மறியாமை யெத்தனை
கதிக்கென் றமைத்த வருளில்
செல்லாமை யெத்தனை விர்தாகோஷ்டி யென்னிலோ
செல்வ தெத்தனை முயற்சி
சிந்தையெத்தனை சலன மிந்தரஜாலம் போன்ற
தேகத்தில் வாஞ்சை முதலா
அல்லாமை யெத்தனை யமைத்தனை யுனக்கடிமை
யானே னிவைக்கு மாளோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே.''

எனத் தாயுமானாரின் பொன்மொழியானும்.

1. ''கொல்விடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லிடி காரர் வரிகயிற்றாற் கட்டிச்
செல்விடு நீரென்று தீவாய் நரகிடை
நில்லுவ ரென்று நிறுத்துவர் தாமே,''

2. ''ஆடுகோழி யருந்து பவர்க் கெல்லாம்
வீடில்லை என்றுரைக்கும் வேதங்கள்,''

எனத் திருமந்திரத்தினும்,

1. ''கொலைகளவு செய்வாரோ டிணங்க வேண்டாம்.

2: புலையுங் கொலையுங் களவுந் தவிர்.''

3. 'நோன்பென்பது கொன்று தின்னாமை.'

என ஔவைக்கிழவி அழகாயருளிய வாக்கானும்,

''கங்கையிற் படிந்திட்டாலும் கடவுளைப் பூசித்தாலும்
மங்குல்போற் கோடிதானம் வள்ளலாய் வழங்கினாலும்
சங்கையில்லாத ஞானசாத்திர முணர்ந்திட் டாலும்
பொங்குறும் புலாற்புசிப்போர் போய்நர கடைவரன்றே,''

எனப் பிறநாலினும் வருவனவற்றைக் காண்க.

இன்னுமிப்படியாயுள்ள அனேக நீதி நூலாதாரவைக்கொண்டு உங்கள் முன்னோர்கள் முதல் நீங்களீருகத் தொன்றுதொட்டுக் கொன்று தின்னும் பழக்கத்தை வழக்கமாகச் செய்துவருவதானும் செய்தல் செய்வித்தல் உடன்படல் என்னும் குற்றத்திற்கு மேற் கூறிய காளி, கறுப்பன், காட்டேரி, மாரி முதலாய தெய்வங்கள் ஒற்றுமையாகவிருந்தமையானும் உங்கள் முன்னோர்கள் பேரினும் மேற்படி தெய்வங்கள் பேரினும் எங்கள் முன்னோர்கள் கைலாசநாத புரம் டிஸ்ட்ரிக்டு கோர்டு சர்வாதிகாரியான ஸ்ரீமான் சதாசிவ ஐய ரவர்கள் முன்னிலையில் சிக்ஷா நியமம் 126-வது வகுப்பின்படி பயில் நம்பர் 11283ல் கலியாப்தம் 4531ம் வருடம் சிம்மரவி 17ம் நாள் தாக்கலான கிரிமினல் கேசுக்கு வைகுண்டபுரம் ஜீவகாருண்ய தயாபரமூர்த்தியாகிய ஸ்ரீமான் ஆதிநாராயண ஐயங்காரவர்கட்கு தரும வக்காலத்துக் கொடுத்து கலியாப்தம் 4835ம் வருடம் மேஷ ரவி 9ம் நாளன்று முதல் வாய்தா ஏற்பட்டு எங்கள் வகை சாக்ஷிக ளாகிய, இந்திரபுரி சதமகன், பிர்மபுரி விரிஞ்சன், தெண்டிசைச் சண்டன், இக்கேசில் எதிரிகளாய்ச் சேர்த்திருக்கும் மேற்கூறிய தேவதைகளில் காளி, கறுப்பன், மாரி, இவ்வாறு சாக்ஷிகளில் ஒன்று முதல் மூன்று வரையுள்ள சாக்ஷிகள் மட்டும் விசாரித்து கேசும் பைலிலிருக்கின்றது. மற்ற மூன்று சாக்ஷிகளையும் விசாரித்துக் கேஸ் முடிவு செய்ய மேற்படி கோர்டு நியாயாதிபதி எத்தனையோ உலக விடயங்களை கவனிக்க வேண்டியவராகையானும் இக்கொலைத் தொழில் மென்மேலும் நடந்துவருவதானும் கேஸ் இன்னும் முடிவு பெறவில்லை. அதனால் ஷை கோர்ட்டாரவர்கள் இக்கேஸ் முடிவா கும் வரை மகா-௱-௱-ஸ்ரீ ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் ஊனப்பட்டு (ஐயனர்) அவர்கட்கு இக்கெட்ட காரியத்தை மேற்படி தெய் வங்களையுமுங்களையும் சட்டப்படி விட்டுவிட திட்டஞ்செய்யும் படி கட்டளையிட்டிருக்கின்றார்களாம். ஷை இன்ஸ்பெக்டரவர் களும் ஜீவகாருண்யமுள்ளவராயினும், பெருத்த இடாம்பீகம் முற்றவராகையால் என் செய்வரோ தெரிகிலோம். அஃதிப்படியி ருக்க இக்காரணங்களை நன்கறியாது கண்மூடித்தனமாயிருப்பவர்கள் தொன்றுதொட்டு இக்கொடிய செய்கையை விட்டொழிந்தனரில்லை.

இக்கொடுமையைப் பாருக்குள் யாருக்கெடுத்துரைப்போம்,
சைவசமயத்துள்ள புண்ணிய சீலரே உங்களுக்கு இது தகுமா?
இது முறையா? இது தருமந்தானா? ஏன் வீணாகப்பாவத்திற்குள்ளா
கின்றீர்கள். எஞ்சிய கன்மசேடம் எப்படித்துலையுமென் றுள்ளுகின்றீ
ரல்லது அதற்கேற்றவாறு செய்திலீரே. முற்றறிவுடைய உங்க
ளுக்கு சிற்றறிவுடைய யாங்கள் புத்தி கற்பிப்பது அழகாமா? மென்
மேலும் துன்மார்க்க நெறிக்கேகாமல் சன்மார்க்கமாயுள்ள சைவ
சமய நன்மார்க்கத்தைக் கைவிடாதீர்கள். அவ்வண்ணம் செய்யின்
மைவண்ணமிடற்றன் எவ்வண்ணமும் உய்வண்ணமளிப்பன், என்
பதை யுற்றுணருங்கள். எவ்வளவோபோதிக்கினும் சாதிக்கும் குண
முடைய அறிவீனர்கள் இவ்வுலகிற் பலர் சிலர் உளர்; அவர்கட்கும்
நீதியைப்புகட்டி நிலைக்கச் செய்யுங்கள். வாழ்நாளை ஊனைத்தின்று
வீணே கழிக்காதீர்கள். அற்ப ஜெந்துவாகிய யாங்கள் மிகப் புத்தி
மான்களாகிய உங்களுக்கு இதைககாட்டினும் வேறென்புகலுவோம்!

ஆனால், மாதா குழந்தைகட்கு கசப்பாகிய அவுழ்தங்களை
இடுக்கிப்புகட்டுவது கொல்வதற்கா? பிதா புதல்வரைக் கண்டித்துத்
துன்புறுத்துவது கெட்டுப்போவதற்கா? குரு மாணாக்கரைச்சிக்ஷி
த்து ஹிம்சிப்பது மூடனாக்குவதற்கா? தெய்வம் கொடுமையாகிய
வறுமையைத் தந்து கஷ்டப்படுத்துவது தீமைக்குள்ளாக்குதற்கா?

"நல்ல குருபரனார் நம்மை வருத்துவது கொல்லவல்ல
பொல்லாக் குணம் போக்க."

என்றபடி இவைகளெல்லாம் உங்களின் கெட்ட செய்கையை
ஒழித்து நன்மையடையும் பொருட்டே ஏற்பட்டிருப்பதுபோல் யாங்
களும் உங்களுடைய கெட்ட பழக்கத்தைவிட்டு நல்ல பழக்கத்தில்
வரவேண்டுமெனக் கருதியும் நீங்கள் எங்களைச் செய்யுங்கொடுமை
யாற்றாதும் சிற்சில விடங்களில உங்கள் செய்கையை இகழ்ந்தும்
உளறி இருப்போம்; அதனைக் கொஞ்சமேனும் குற்றமாகக்கொள்
ளாது குற்றத்தை நீக்கிக் குணத்தைத் தழுவி யாங்களிதுகாறும்
கூறிய விஷயங்கள் ஈடேறும்படி செய்து எங்களை என்றென்றைக்

ரும் காத்து ரக்ஷிக்கவேண்டுமென மிக அன்புடனும் வணக்க னும் மன்றாடிக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகின்றோம்.

இன்னுமுறைக்கிற் பின்னும் விரியுமென இம்மட்டோடு முடித் திருக்கின்றோம்.

நேரிசை வெண்பா.

"உன்னப் பவம்போக்கு மோடுமிடி செல்வமிகு
மன்னுபுக ழெல்லாம் வளருமே - இன்னிலத்து
கொலைகளவு கட்காமங் கோபமற்று ஜீவ
நிலையதனை இன்னதென்றே நெஞ்சில்"

ஜீவகாருண்யம் செழித்தோங்குக.

முற்றிற்று.

சுபம்! சுபம்!! சுபம்!!!

ஓம் தத் ஸத்.

---

# முக்கிய கவனிப்பு.

---

இப்போதத்தைக் கல்லாதவர்கட்கும் பெண்பாலாயுள்ளவர்க ளுக்கும் ஒருமுறை தயவுசெய்து வாசித்துக் காண்பிக்கக்கோருகிறோம்.

மேலும், இக்காலத்தில்ச்சிலர் தமிழ் அபிமானிகள்போ பெருமைக்காகப் பத்திரிகைகளையும், நாவல்களையும் தம் பொரு செலவால் தருவித்து, அதிலுள்ள விஷயங்களை இன்னதென அ யாமலே, ஒன்றின்மேலொன்றாய் அழகாய் அடுக்கிவைத்துப் பிற பற்பொடி மடிக்கின்றார்கள். இப்புத்தகமோ பொருளிலாது கிடை பதனால் அதற்காயினும் ஆகுமோ, ஆகாதோவென நினைக்கின்றே

அன்பர்களே, அவ்விதம் செய்யாது, இப்புத்தகத்தை மு றிலும் வாசித்து, இதனுண்மையை அறியவேண்டுமெனக் கேட் கொள்கின்றோம்.

---

N. B.— இப்புத்தகம் வேண்டுவோர் அடியிற்கண்ட வ
தாரிடம் அரையணு ஸ்டாம்பு அனுப்பிப்பெற்றுக்கொள்ளலாம்.

1. பே. பெரி. சுப்பையா செட்டியார்.

2. ஸ்ரீ மீனம்பிகா வாசகசாலை, காரியதரிசி.

3. கவி. வினைதீர்த்தனுச்சாரி,
ஆவினிப்பட்டி,
குருவிக்கொண்டான்பட்டி போஸ்ட்,
புதுக்கோட்டை ஸ்டேட்.

4. எஸ். முத்தையாபிள்ளை,
இளையாற்றங்குடி,
கீழச்சிவல்பட்டி போஸ்ட்,
இராமநாதபுரம் ஜில்லா.

5. காரை சிவனடியார் திருக்கூட்டம்,
காரியதரிசி,
காரைக்குடி,
இராமநாதபுரம் ஜில்லா.

6. பு. சி புன்னைவனநாத முதலியார்,
ஸௌராஷ்டிரா ஹைஸ்கூல் தமிழ் பண்டிதர்,
மதுரை.